கதியேலில்லை , நின்னருளல்லது எனக்கு *
நிதியே!, திருநீர்மலை நித்திலத்தொத்தே **
பதியே! பரவித்தொழும் , தொண்டர்தமக்குக்
கதியே * உன்னைக்கண்டு கொண்டு , உய்ந்தொழிந்தேனே. 7

அத்தா! அரியே! என்று , உன்னைஅழைக்க *
பித்தாவென்று பேசுகின்றார் , பிறர்என்னை **
முத்தே! மணிமாணிக்கமே! , முளைக்கின்ற
வித்தே! * உன்னை எங்ஙனம்நான், விடுகேனே?. 8

தூயாய்! சுடர் மாமதிபோல் * உயிர்க்கெல்லாம்
தாயாயளிக்கின்ற , தண்தாமரைக் கண்ணா **
ஆயா! அலைநீருலகேழும் , முன்னுண்ட
வாயா! * உன்னை எங்ஙனம் , நான் மறக்கேனே?. 9

§ வண்டார் பொழில்சூழ் , நறையூர் நம்பிக்கு * என்றும்
தொண்டாயக் , கலியன் ஒலிசெய் தமிழ்மாலை **
தொண்டீர்! இவைபாடுமின் , பாடி நின்றாட *
உண்டே விசும்பு , உந்தமக்கு இல்லைதுயரே. 10

அடிவரவு: கறவா வற்றா தாரேன் புள் வில் பனி கதி அத்தா தூயாய் வண்டார் புள்ளாய்

# *புள்ளாய்* (7 - 2)

*(திருநறையூர்- 9 )*

§ புள்ளாய் ஏனமுமாய்ப் , புகுந்து * என்னையுள்ளங்கொண்ட
கள்வா! என்றலும் , என் கண்கள் நீர் சோர்தருமால் **
உள்ளே நின்றுருகி , நெஞ்சம் உன்னை உள்ளியக்கால் *
நள்ளேன் உன்னையல்லால் , நறையூர் நின்ற நம்பீயோ!. 1

ஓடாவாளரியின் , உருவாய் மருவி * என்தன்
மாடே வந்து, அடியேன் மனங்கொள்ள வல்லமைந்தா**
பாடேன் தொண்டர் தம்மைக் , கவிதைப்பனுவல் கொண்டு *
நாடேன் உன்னையல்லால் , நறையூர் நின்ற நம்பீயோ!. 2

எம்மானும் எம்மனையும் , என்னைப்பெற்று ஒழிந்ததற்பின் *
அம்மானும் அம்மனையும் , அடியேனுக்காகி நின்ற **
நன்மானவொண்சுடரே! , நறையூர் நின்றநம்பீ * உன்
மைம்மான வண்ணமல்லால் , மகிழ்ந்து ஏத்தமாட்டேனே. 3

சிறியாய் ஓர் பிள்ளையுமாய் , உலகுண்டு ஓராலிலைமேல்
உறைவாய்! * என் நெஞ்சினுள்ளே, உறைவாய் உறைந்தது தான் **
அறியாதிருந்து அறியேன் , அடியேன், அணிவண்டுகிண்டும் *
நறைவாரும் பொழில் சூழ் , நறையூர் நின்ற நம்பீயோ!. 4

நீண்டாயை வானவர்கள் , நினைந்து ஏத்திக்காண்பரிதால் *
ஆண்டாயென்று ஆதரிக்கப்படுவாய்க்கு , நானடிமை
பூண்டேன் ** என் நெஞ்சினுள்ளே , புகுந்தாயைப் போகலொட்டேன் *
நாண்தான் உனக்கொழிந்தேன் , நறையூர்நின்ற நம்பீயோ!. 5

எந்தாதை தாதையப்பால் , எழுவர் பழவடிமை
வந்தார் * என் நெஞ்சினுள்ளே , வந்தாயைப்போகலொட்டேன் **
அந்தோ! என்னாருயிரே! , அரசே! அருள்எனக்கு *
நந்தாமல் தந்தஎந்தாய்! , நறையூர் நின்ற நம்பீயோ!. 6

மன்னெஞ்ச ஆயிரந்தோள் , மழுவில் துணித்தமைந்தா ! *
என்னெஞ்சத்துள்ளிருந்து , இங்கு இனிப்போய்ப் பிறரொருவர் **
வன்னெஞ்சம் புக்கிருக்கவொட்டேன் , வளைத்து வைத்தேன் *
நன்னெஞ்சவன்ன மன்னும் , நறையூர் நின்ற நம்பீயோ!. 7

எப்போதும் பொன்மலரிட்டு , இமையோர் தொழுது * தங்கள்
கைப்போது கொண்டுஇறைஞ்சிக் , கழல்மேல் வணங்க நின்றாய்**
இப்போதுஎன்நெஞ்சினுள்ளே , புகுந்தாயைப் போகலொட்டேன் *
நற்போது வண்டுகிண்டும் , நறையூர் நின்ற நம்பீயோ!. 8

ஊனேராக்கை தன்னை , உழந்தோம்பி வைத்தமையால் *
யானாய் என்தனக்காய் , அடியேன் மனம் புகுந்த

தேனே ** தீங்கரும்பின் தெளிவே! , என் சிந்தை தன்னால் *
நானே எய்தப்பெற்றேன் , நறையூர்நின்ற நம்பீயோ!. 9

§ நன்னீர் வயல்புடைசூழ் , நறையூர் நின்றநம்பியை *
கன்னீர மால்வரைத்தோள் , கலிகன்றி மங்கையர்கோன் **
சொன்னீர சொல்மாலை , சொல்வார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால் மகிழ்ந்து , நெடுங்காலம் வாழ்வாரே. 10

அடிவரவு: புள் ஓடா எம்மானும் சிறியாய் நீண்டாய் எந்தாதை மன் எப்போதும் ஊனேர் நன்னீர் சினவில்

## *சினவில்* (7 - 3)

*(திருநறையூர்- 10 )*

§ சினவில் செங்கணரக்கர் உயிர்மாளச்,
செற்றவில்லியென்று கற்றவர்தந் தம்
மனமுள் கொண்டு * என்றும் எப்போதும் நின்றேத்தும்
மாமுனியை , மரமேழ் எய்தமைந்தனை **
நனவில்சென்றார்க்கும் நண்ணற்கரியானை ,
நான் அடியேன் நறையூர் நின்ற நம்பியை *
கனவில்கண்டேன் இன்றுகண்டமையால் , என்
கண்ணிணைகள் களிப்பக்களித்தேனே!. 1

தாய்நினைந்த கன்றேயொக்க , என்னையும்
தன்னையே நினைக்கச்செய்து * தான் எனக்காய்
நினைந்தருள் செய்யும் அப்பனை ,
அன்று இவ்வையகம் உண்டுமிழ்ந்திட்ட
வாயனை ** மகரக்குழைக்காதனை
மைந்தனை , மதிள்கோவலிடைகழி
ஆயனை * அமரர்க்கு அரியேற்றை , என்
அன்பனையன்றி ஆதரியேனே. 2

வந்தநாள் வந்து என்நெஞ்சிடம் கொண்டான் ,
மற்றோர் நெஞ்சறியான் *அடியேனுடைச்
சிந்தையாய் வந்து தென்புலர்க்கு என்னைச்
சேர் கொடான் , இது சிக்கெனப் பெற்றேன் **
கொந்துலாம் பொழில்சூழ் குடந்தைத் தலைக்
கோவினைக் , குடமாடிய கூத்தனை *
எந்தையை எந்தை தந்தை தம்மானை ,
எம்பிரானை எத்தால் மறக்கேனே?. 3

உரங்களால் இயன்ற மன்னர்மாளப் ,
பாரதத்து ஒருதேர் ஐவர்க்காய்ச் சென்று *
இரங்கியூர்ந்து அவர்க்கு இன்னருள் செய்யும்
எம்பிரானை , வம்பார் புனல் காவிரி **
அரங்கமாளி என்னாளி விண்ணாளி ,
ஆழிசூழிலங்கை மலங்கச்சென்று *
சரங்களாண்ட தண்தாமரைக்கண்ணனுக்கன்றி ,
என் மனம் தாழ்ந்து நில்லாதே. 4

ஆங்குவெந்நரகத்து அழுந்தும்போது ,
அஞ்சேலென்று அடியேனை அங்கே வந்து
தாங்கு * தாமரையன்ன பொன்னாரடி
எம்பிரானை , உம்பர்க்கணியாய் நின்ற **
வேங்கடத்தரியைப் பரிகீறியை,
வெண்ணெயுண்டு உரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினை * தேனை நன்பாலினையன்றி
என்மனம் சிந்தை செய்யாதே. 5

எட்டனைப்பொழுதாகிலும் , என்றும்
என் மனத்தகலாதிருக்கும்புகழ் *
தட்டலர்த்த பொன்னேயலர்கோங்கின் ,
தாழ்பொழில் திருமாலிருஞ்சோலையங்

கட்டியை ** கரும்பீன்ற இன்சாற்றைக் ,
காதலால் மறைநான்கும் முன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை , என்
பண்பனையன்றிப் பாடல்செய்யேனே 6

பண்ணின் இன்மொழி யாழ்நரம்பில் பெற்ற ,
பாலையாகி இங்கே புகுந்து * என்
கண்ணும் நெஞ்சும் வாயும் இடங்கொண்டான் ,
கொண்டபின் மறையோர் மனந்தன்னுள் **
விண்ணுளார் பெருமானை எம்மானை ,
வீங்கு நீர்மகரம் திளைக்கும்கடல்
வண்ணன் * மாமணிவண்ணன் எம் அண்ணல்,
வண்ணமேயன்றி வாயுரையாதே. 7

இனி எப்பாவம் வந்தெய்தும்? சொல்லீர் ,
எமக்கு இம்மையே அருள் பெற்றமையால் * அடும்
துனியைத் தீர்த்து இன்பமே தருகின்றது ஓர் ,
தோற்றத்தொன்னெறியை ** வையம் தொழப்படும்
முனியை வானவரால் வணங்கப்படும்
முத்தினைப், பத்தர்தாம் நுகர்கின்றது ஓர்
கனியை * காதல்செய்து என்னுள்ளம் கொண்ட
கள்வனை , இன்றுகண்டு கொண்டேனே. 8

என்செய்கேன் அடியேன்? உரையீர் , இதற்கு என்றும்
என் மனத்தே இருக்கும் புகழ் *
தஞ்சையாளியைப் பொன்பெயரோன் ,
நெஞ்சம் அன்று இடந்தவனைத் தழலேபுரை **
மின்செய் வாளரக்கன் நகர்பாழ்படச் ,
சூழ்கடல்சிறை வைத்து, இமையோர் தொழும் *
பொன்செய் மால்வரையை மணிக்குன்றினைஅன்றி ,
என் மனம் போற்றியென்னாதே. 9

§ தோடு விண்டலர் பூம்பொழில் மங்கையர்
தோன்றல் , வாள்கலியன் திருவாலி
நாடன் * நன்னறையூர் நின்ற நம்பிதன் **
நல்ல மாமலர் சேவடிசென்னியில்
சூடியும்தொழுதும் எழுந்தாடியும் ,
தொண்டர்கட்கு அவன்சொன்ன சொல்மாலை *
பாடல் பத்திவை பாடுமின்தொண்டீர்!
பாட , நும்மிடைப் பாவம்நில்லாவே. 10

அடிவரவு: சினவில் தாய் வந்த உரங்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி என்செய்கேன் தோடு கண்

## *கண் சோர* (7 - 4)

*( திருச்சேறை )*

§ கண் சோர வெங்குருதி வந்திழிய ,
வெந்தழல் போல் கூந்தலாளை *
மண்சேர முலையுண்ட மாமதலாய்! ,
வானவர் தம்கோவே! என்று **
விண்சேரும் இளந்திங்கள் அகடுரிஞ்சு ,
மணிமாடமல்கு * செல்வத்
தண்சேறை எம்பெருமான் தாள்தொழுவார்
காண்மின் , என் தலைமேலாரே. 1

அம்புருவ வரிநெடுங்கண் , அலர்மகளை
வரையகலத்தமர்ந்து * மல்லல்
கொம்புருவ விளங்கனிமேல் , இளங்கன்று
கொண்டெறிந்த கூத்தர்போலாம் **
வம்பலரும் தண்சோலை , வண்சேறை
வானுந்து கோயில்மேய *
எம்பெருமான் தாள்தொழுவார் , எப்பொழுதும்
என் மனத்தே இருக்கின்றாரே. 2

மீதோடி வாளெயிறு மின்னிலக ,
முன்விலகும் உருவினாளை *
காதோடு கொடிமூக்கு அன்று உடனறுத்த ,
கைத்தலத்தா! என்று நின்று **
தாதோடு வண்டலம்பும், தண்சேறை
எம்பெருமான் தாளையேத்தி *
போதோடு புனல் தூவும் புண்ணியரே ,
விண்ணவரில் பொலிகின்றாரே. 3

தேராளும் வாளரக்கன் , தென்னிலங்கை
வெஞ்சமத்துப்பொன்றி வீழ *
போராளும் சிலையதனால் , பொருகணைகள்
போக்குவித்தாய் என்று ** நாளும்
தாராளும் வரைமார்பன் , தண்சேறை
எம்பெருமான் உம்பராளும் *
பேராளன் பேரோதும் பெரியோரை ,
ஒருகாலும் பிரிகிலேனே. 4

வந்திக்கும் மற்றவர்க்கும் , மாசுடம்பில்
வல்லமணர் தமக்கும் அல்லேன் *
முந்திச் சென்று அரியுருவாய் , இரணியனை
முரணழித்த முதல்வர்க்கல்லால் **
சந்தப்பூ மலர்ச்சோலைத் , தண்சேறை
எம்பெருமான் தாளை * நாளும்
சிந்திப்பார்க்கு என்னுள்ளம் தேனூறி ,
எப்பொழுதும் தித்திக்குமே. 5

பண்டு ஏனமாய் உலகை அன்றிடந்த ,
பண்பாளா! என்று நின்று *
தொண்டானேன் திருவடியே துணையல்லால் ,
துணையிலேன் சொல்லுகின்றேன் **

வண்டேந்தும் மலர்ப்புறவில் , வண்சேறை
எம்பெருமானடியார் தம்மை *
கண்டேனுக்கு இதுகாணீர் , என் நெஞ்சும்
கண்ணிணையும் களிக்குமாறே. 6

பைவிரியும் வரியரவில் , படுகடலுள்
துயிலமர்ந்த பண்பா! என்றும் *
மைவிரியும் மணிவரை போல் , மாயவனே!
என்றென்றும் வண்டார் நீலம் **
செய்விரியும் தண்சேறை எம்பெருமான் ,
திருவடியைச் சிந்தித்தேற்கு * என்
ஐயறிவும் கொண்டானுக்கு , ஆளானார்க்கு
ஆளாம் என் அன்பு தானே. 7

உண்ணாது வெங்கூற்றம் , ஓவாத
பாவங்கள் சேரா * மேலை
விண்ணோரும் மண்ணோரும் வந்திறைஞ்சும் ,
மெந்தளிர்போல் அடியினானை **
பண்ணார வண்டியம்பும் பைம்பொழில்சூழ் ,
தண்சேறை அம்மான் தன்னை *
கண்ணாரக் கண்டுருகிக் , கையாரத்
தொழுவாரைக் கருதுங்காலே. 8

கள்ளத்தேன் பொய்யகத்தேன் ஆதலால் ,
போதொருகால் கவலை என்னும் *
வெள்ளத்தேற்கு என்கொலோ? , விளைவயலுள்
கருநீலம் களைஞர்தாளால்
தள்ள ** தேன் மணநாறும் , தண்சேறை
எம்பெருமான் தாளை * நாளும்
உள்ளத்தே வைப்பாருக்கு இதுகாணீர் ,
என்னுள்ளம் உருகுமாறே. 9

§ பூமாண்சேர் கருங்குழலார் போல் நடந்து ,
வயல் நின்ற பெடையோடு * அன்னம்
தேமாவின் இன்னிழலில் கண்துயிலும் ,
தண்சேறை அம்மான் தன்னை **
வாமான் தேர்ப்பரகாலன் , கலிகன்றி
ஒலிமாலை கொண்டு தொண்டீர் *
தூமாண்சேர் பொன்னடிமேல் சூட்டுமின் , நும்
துணைக்கையால் தொழுது நின்றே. 10

அடிவரவு: கண் அம்பு மீதோடி தேராளும் வந்திக்கும் பண்டு பைவிரியும் உண்ணாது கள்ளத்தேன் பூமாண் தந்தை.

## *தந்தை காலில்* (7 - 5)

*(திருவழுந்தூர் - 1)*

*(தலைவனைப் புணர்ந்து பிரிந்த தலைவி தனது பாங்கியர்க்குத் தலைவன் பதியுரைத்த பாசுரம்)*

§ தந்தை காலில் பெருவிலங்கு , தாளவிழ * நள்ளிருட்கண்
வந்த எந்தை பெருமானார் , மருவி நின்ற ஊர் போலும் **
முந்தி வானம் மழைபொழியும் , மூவாவுருவின் மறையாளர் *
அந்திமூன்றும் அனலோம்பும் , அணியார் வீதி அழுந்தூரே. 1

பாரித்தெழுந்த , படைமன்னர் தம்மை மாள * பாரதத்துத்
தேரில் பாகனாய் ஊர்ந்த , தேவ தேவன் ஊர் போலும் **
நீரில் பணைத்த நெடுவாளைக்கு , அஞ்சிப்போன குருகினங்கள் *
ஆரல்கவுளோடு அருகணையும் , அணியார் வயல்சூழ் அழுந்தூரே 2

செம்பொன்மதிள்சூழ்தென்னிலங்கைக்கிறைவன், சிரங்கள் ஐயிரண்டும் *
உம்பர்வாளிக்கு இலக்காக , உதிர்த்தவுரவோன் ஊர் போலும் **
கொம்பிலார்ந்த மாதவிமேல் , கோதி மேய்ந்த வண்டினங்கள் *
அம்பராவும்கண்மடவார் , ஐம்பாலணையும் அழுந்தூரே. 3

வெள்ளத்துள் ஓராலிலைமேல்மேவி , அடியேன் மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளும் கண்ணுள்ளும் , நின்றார் நின்ற ஊர் போலும் **
புள்ளுப் பிள்ளைக்கிரை தேடிப் , போன காதல் பெடையோடும் *
அள்ளல் செறுவில் கயல் நாடும் , அணியார் வயல்சூழ் அழுந்தூரே 4

பகலும் இரவும்தானேயாய்ப் , பாரும் விண்ணும் தானேயாய் *
நிகரில் சுடராயிருளாகி , நின்றார் நின்ற ஊர்போலும் **
துகிலின் கொடியும் தேர்த்துகளும் , துன்னி மாதர் கூந்தல்வாய் *
அகிலின் புகையால் முகிலேய்க்கும் , அணியார் வீதி அழுந்தூரே 5

ஏடிலங்கு தாமரைபோல் , செவ்வாய்முறுவல் செய்தருளி *
மாடுவந்துஎன்மனம் புகுந்து , நின்றார் நின்றஊர்போலும் **
நீடு மாடத்தனிச்சூலம் போழக் , கொண்டல் துளிதூவ *
ஆடலரவத்தார்ப்பு ஓவா , அணியார் வீதிஅழுந்தூரே. 6

மாலைப்புகுந்து மலரணைமேல்வைகி , அடியேன் மனம் புகுந்து * என்
நீலக்கண்கள் பனிமல்க , நின்றார் நின்ற ஊர்போலும் **
வேலைக்கடல்போல் நெடுவீதி , விண்தோய் சுதைவெண்மணி மாடத்து *
ஆலைப்புகையால் அழல்கதிரை மறைக்கும் , வீதிஅழுந்தூரே. 7

வஞ்சி மருங்குலிடைநோவ , மணந்து நின்ற கனவகத்து * என்
நெஞ்சு நிறையக் கைகூப்பி , நின்றார் நின்ற ஊர்போலும் *
பஞ்சியன்ன மெல்லடி , நற்பாவைமார்கள் * ஆடகத்தின்
அஞ்சிலம்பினார்ப்பு ஓவா, அணியார் வீதி அழுந்தூரே. 8

என்னைம்புலனும் எழிலுங்கொண்டு, இங்கே நெருநல்எழுந்தருளி *
பொன்னங்கலைகள் மெலிவெய்தப் , போன புனிதர் ஊர்போலும்*
மன்னுமுதுநீர் அரவிந்தமலர்மேல் , வரிவண்டிசைபாட *
அன்னம்பெடையோடு உடனாடும் , அணியார் வயல்சூழ் அழுந்தூரே 9

§ நெல்லில் குவளை கண்காட்ட, நீரில் குமுதம் வாய்காட்ட *
அல்லிக்கமலம் முகங்காட்டும் , கழனியழுந்தூர் நின்றானை **
வல்லிப்பொதும்பில் குயில்கூவும் , மங்கைவேந்தன் பரகாலன் *
சொல்லில் பொலிந்த தமிழ்மாலை, சொல்லப்பாவம் நில்லாவே. 10

அடிவரவு: தந்தை பாரித்து செம்பொன் வெள்ளத்துள் பகல் ஏடு மாலை வஞ்சி என்னைம்புலனும் நெல்லில் சிங்கம்.

# சிங்கமதாய் (7 - 6)

*(திருவழுந்தூர் - 2)*

§ சிங்கமதாய் அவுணன், திறலாகம் முன் கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் , தழலாழிவலத்தானை **
செங்கமலத்தயனனையார் , தென்னழுந்தையில் மன்னிநின்ற *
அங்கமலக் கண்ணனை , அடியேன் கண்டு கொண்டேனே. 1

கோவானார் மடியக் , கொலையார் மழுக்கொண்டருளும் *
மூவாவானவனை , முழுநீர்வண்ணனை ** அடியார்க்கு
ஆ! ஆ! என்றிரங்கித் , தென்னழுந்தையில் மன்னிநின்ற *
தேவாதிதேவனை , யான்கண்டுகொண்டு திளைத்தேனே. 2

உடையானை, ஒலிநீருலகங்கள் படைத்தானை *
விடையானோட அன்று , விறலாழி விசைத்தானை **
அடையார் தென்னிலங்கையழித்தானை , அணியழுந்தூர்
உடையானை * அடியேன் , அடைந்துய்ந்து போனேனே. 3

குன்றால் மாரி தடுத்தவனைக், குலவேழம் அன்று
பொன்றாமை * அதனுக்கு அருள்செய்த , போரேற்றை **
அன்று ஆவின் நறுநெய்யமர்ந்துண்ண , அணியழுந்தூர்
நின்றானை * அடியேன் , கண்டுகொண்டு நிறைந்தேனே. 4

கஞ்சனைக் காய்ந்தானைக் , கண்ணமங்கையுள் நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூடு , உயிர்வாய்மடுத்துண்டானை **
செஞ்சொல் நான்மறையோர் , தென்னழுந்தையில் மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றம் தன்னை , அடியேன்கண்டு கொண்டேனே 5

பெரியானை, அமரர் தலைவற்கும் பிரமனுக்கும் *
உரியானை உகந்தானவனுக்கும் , உணர்வதனுக்கு
அரியானை ** அழுந்தூர் மறையோர்கள் , அடிபணியும்
கரியானை * அடியேன் , கண்டுகொண்டு களித்தேனே. 6

**திருவாழ் மார்வன் தன்னைத் , திசைமண் நீர் எரிமுதலா *
உருவாய் நின்றவனை , ஒலிசேரும் மாருதத்தை **
அருவாய் நின்றவனைத் , தென்னழுந்தையில் மன்னி நின்ற *
கருவார் கற்பகத்தைக் , கண்டுகொண்டு களித்தேனே.** 7

**நிலையாளாக , என்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள் வித்தகனை , முதுநான்மறை வீதிதொறும் **
அலையாரும்கடல்போல்முழங்கும்,தென்னழுந்தையில்மன்னிநின்ற*
கலையார் சொற்பொருளைக் , கண்டுகொண்டு களித்தேனே** 8

**§ பேரானைக் , குடந்தைப் பெருமானை * இலங்கொளிசேர்
வாரார் வனமுலையாள் , மலர்மங்கை நாயகனை **
ஆராஇன்னமுதைத் , தென்னழுந்தையில் மன்னி நின்ற *
காரார்கருமுகிலைக் , கண்டுகொண்டு களித்தேனே.** 9

**§ திறல் முருகனனையார் , தென்னழுந்தையில் மன்னி நின்ற *
அறமுதல்வனவனை , அணியாலியர்கோன் மருவார் **
கறை நெடுவேல்வலவன் , கலிகன்றி சொல் ஐயிரண்டும் *
முறைவழுவாமை வல்லார் , முழுது ஆள்வர் வானுலகே.** 10

அடிவரவு: சிங்கமது கோ உடையானை குன்றால் கஞ்சனை பெரியானை திருவாழ் நிலை பேரானை திறல் திரு.

# *திருவுக்கும்* (7 - 7)

*(திருவழுந்தூர் - 3)*

**§ திருவுக்கும் திருவாகிய செல்வா! ,
தெய்வத்துக்கரசே! செய்ய கண்ணா! *
உருவச்செஞ்சுடராழி வல்லானே! ,
உலகுண்ட ஒருவா! திருமார்பா! **
ஒருவற்காற்றியுய்யும் வகையென்றால் ,
உடன்நின்று ஐவரென்னுள் புகுந்து * ஒழியாது
அருவித்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன் ,
அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!.** 1

பந்தார் மெல்விரல் நல்வளைத்தோளி ,
பாவை பூமகள் தன்னொடும் உடனே
வந்தாய் * என்மனத்தே மன்னி நின்றாய் ,
மால்வண்ணா! மழைபோல் ஒளிவண்ணா **
சந்தோகா! பௌழியா! தைத்திரியா! ,
சாம வேதியனே! நெடுமாலே! *
அந்தோ! நின்னடியன்றி மற்றறியேன் ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 2

நெய்யாராழியும் சங்கமுமேந்தும் ,
நீண்டதோளுடையாய்! * அடியேனைச்
செய்யாதவுலகத்திடைச்செய்தாய் ,
சிறுமைக்கும் பெருமைக்கும் உள்புகுந்து **
பொய்யால் ஐவர் என்மெய்குடியேறிப்,
போற்றி வாழ்வதற்கு அஞ்சி நின்னடைந்தேன் *
ஐயா! நின்னடியன்றி மற்றறியேன் ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 3

பரனே! பஞ்சவன் பௌழியன் சோழன் ,
பார்மன்னர் மன்னர் தாம்பணிந்தேத்தும்
வரனே! * மாதவனே! மதுசூதா! ,
மற்றோர் நல்துணை நின்னலால் இலேன் காண்**
நரனே! நாரணனே! திருநறையூர்நம்பீ! ,
எம்பெருமான்! உம்பராளும்
அரனே! * ஆதிவராகமுனானாய்! ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 4

விண்டான் விண்புக வெஞ்சமத்துஅரியாய்ப் ,
பரியோன் மார்வகம் பற்றிப்பிளந்து *
பண்டு ஆனுய்ய ஓர்மால்வரையேந்தும் ,
பண்பாளா! பரனே! பவித்திரனே !**

கண்டேன் நான்கலியுகத்ததன் தன்மை ,
கருமமாவதும் என்தனக்கு அறிந்தேன் *
அண்டா! நின்னடியன்றி மற்றறியேன் ,
அழுந்தூர்மேல்திசை நின்றஅம்மானே!. 5

தோயா இன்தயிர் நெய்யமுதுண்ணச்
சொன்னார் , சொல்லி நகும்பரிசே * பெற்ற
தாயாலாப்புண்டிருந்து அழுதேங்கும்
தாடாளா! , தரையோர்க்கும் விண்ணோர்க்கும்
சேயாய்! ** கிரேத திரேத துவாபர
கலியுகம் , இவை நான்கும்முனானாய்! *
ஆயா! நின்னடியன்றி மற்றறியேன் ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 6

கறுத்துக்கஞ்சனை அஞ்சமுனிந்தாய்! ,
கார்வண்ணா! கடல்போல் ஒளிவண்ணா *
இறுத்திட்டான் விடையேழும் முன்வென்றாய்! ,
எந்தாய்! அந்தரமேழும்முனானாய்! **
பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணாப் ,
போகமே நுகர்வான் புகுந்து * ஐவர்
அறுத்துத் தின்றிட அஞ்சி நின்னடைந்தேன் ,
அழுந்தூர் மேல்திசைநின்ற அம்மானே!. 7

நெடியானே! கடியார்கலிநம்பீ! ,
நின்னையே நினைந்து இங்கிருப்பேனை *
கடியார் காளையரைவர் புகுந்து ,
காவல்செய்து அக்காவலைப்பிழைத்து **
குடிபோந்து உன்னடிக்கீழ் வந்துபுகுந்தேன் ,
கூறைசோறு இவை தந்தெனக்கருளி *
அடியேனைப்பணியாண்டு கொள் எந்தாய்! ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 8

கோவாய் ஐவர் என்மெய்குடியேறிக் ,
கூறைசோறிவை தாவென்றுகுமைத்துப்
போகார் * நான் அவரைப் பொறுக்ககிலேன்
புனிதா! , புட்கொடியாய்! நெடுமாலே **
தீவாய் நாகணையில்துயில்வானே!,
திருமாலே! இனிச்செய்வதொன்றறியேன் *
ஆ! ஆ! என்றடியேற்கு இறைஇரங்காய் ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானே!. 9

§ அன்னமன்னு பைம்பூம்பொழில்சூழ்ந்த ,
அழுந்தூர் மேல்திசை நின்றஅம்மானை *
கன்னி மன்னு திண்தோள் கலிகன்றி
ஆலிநாடன் , மங்கைக்குலவேந்தன் **
சொன்ன இன்தமிழ் நன்மணிக்கோவை ,
தூயமாலையிவை பத்தும்வல்லார் *
மன்னி மன்னவராய் உலகாண்டு ,
மானவெண்குடைக்கீழ் மகிழ்வாரே. 10

அடிவரவு: திருவுக்கும் பந்தார் நெய் பரனே விண்டான் தோயா கறுத்து நெடியானே கோவாய் அன்னம் செங்கமலம்.

## செங்கமலம் (7 - 8)

*(திருவழுந்தூர் - 4)*

§ செங்கமலத்திருமகளும் புவியும்,
செம்பொன் திருவடியினிணைவருட முனிவரேத்த *
வங்கமலி தடங்கடலுள் அனந்தனென்னும் ,
வரியரவினணைத் துயின்ற மாயோன் காண்மின் **
எங்குமலி நிறை புகழ்நால்வேதம் , ஐந்து
வேள்விகளும் கேள்விகளும் இயன்றதன்மை *
அங்கமலத்தயனனையார் பயிலும்செல்வத்து ,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோவே. 1

§ முன்இவ்வுலகேழும் இருள்மண்டியுண்ண,
முனிவரொடு தானவர்கள் திசைப்ப * வந்து
பன்னுகலை நால்வேதப்பொருளையெல்லாம் ,
பரிமுகமாய்அருளிய எம்பரமன் காண்மின்**
செந்நெல்மலி கதிர்க்கவரிவீசச்,
சங்கமவைமுரலச் செங்கமலமலரையேறி *
அன்னமலிபெடையோடும் அமரும்செல்வத்து ,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோவே. 2

குலத்தலைய மதவேழம் பொய்கைபுக்குக்,
கோள்முதலைபிடிக்க அதற்கு அனுங்கி நின்று *
நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதீ! என்ன,
நெஞ்சிடர் தீர்த்தருளிய என் நிமலன் காண்மின் **
மலைத்திகழ் சந்தகில் கனகமணியும் கொண்டு,
வந்துந்தி வயல்கள்தொறும் மடைகள் பாய *
அலைத்து வரும் பொன்னிவளம் பெருகும்செல்வத்து ,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே. 3

சிலம்புமுதல் கலனணிந்தோர் செங்கண் குன்றம்,
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றியாகி *
இலங்குபுவி மடந்தைதனை இடந்து புல்கி,
எயிற்றிடைவைத்தருளிய எம்மீசன்காண்மின் **
புலம்புசிறை வண்டொலிப்பப் பூகம்தொக்க ,
பொழில்கள்தொறும் குயில்கூவ மயில்களால *
அலம்பு திரைப்புனல் புடைசூழ்ந்து அழகார் செல்வத்து,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே. 4

சினமேவும் அடலரியினுருவமாகித்,
திறல்மேவும் இரணியனதாகம் கீண்டு *
மனமேவு வஞ்சனையால் வந்தபேய்ச்சி
மாள , உயிர்வெளவிய எம்மாயோன்காண்மின்**

இனமேவு வரிவளக்கையேந்தும், கோவை
யேய்வாய் மரகதம்போல் கிளியினின்சொல் *
அனமேவு நடைமடவார் பயிலும் செல்வத்து,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே. 5

வானவர்தம் துயர்தீர வந்து தோன்றி,
மாணுருவாய் மூவடிமாவலியைவேண்டி*
தானமர ஏழுலகுமளந்த வென்றித்,
தனிமுதல்சக்கரப்படை என்தலைவன் காண்மின்**
தேனமரும் பொழில்தழுவும்எழில்கொள்வீதிச் ,
செழுமாட மாளிகைகள் கூடந்தோறும் *
ஆனதொல்சீர் மறையாளர் பயிலும்செல்வத்து ,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோவே. 6

பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப்,
பகலவன் மீதியங்காத இலங்கைவேந்தன் *
அந்தமில் திண்கரம் சிரங்கள் புரண்டுவீழ.
அடுகணையால் எய்துகந்த அம்மான் காண்மின்**
செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர்,
திசைமுகனை அனையவர்கள் செம்மைமிக்க *
அந்தணர்தம் ஆகுதியின் புகையார் செல்வத்து,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோவே. 7

கும்பமிகுமதவேழம் குலையக்கொம்பு
பறித்து , மழவிடையடர்த்துக் குரவைகோத்து *
வம்பவிழும் மலர்க்குழலாளாய்ச்சி வைத்த ,
தயிர்வெண்ணெய் உண்டுகந்த மாயோன் காண்மின் **
செம்பவள மரதகம் நன்முத்தம்காட்டத்,
திகழ்பூகம் கதலிபல வளம்மிக்குளங்கும் *
அம்பொன்மதிள் பொழில்புடைசூழ்ந்து அழகார்செல்வத்து,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே. 8

ஊடேறு கஞ்சனொடு மல்லும்வில்லும்,
ஒண்கரியும் உருள்சகடும் உடையச்செற்ற *
நீடேறு பெருவலித்தோளுடைய வென்றி ,
நிலவுபுகழ் நேமியங்கை நெடியோன் காண்மின் **
சேடேறு பொழில்தழுவும் எழில்கொள்வீதித் ,
திருவிழவில் மணியணிந்த திண்ணை தோறும் *
ஆடேறு மலர்க்குழலார் பயிலும் செல்வத்து,
அணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே. 9

§ பன்றியாய் மீனாகி அரியாய்ப் , பாரைப்
படைத்துக்காத்து உண்டுமிழ்ந்த பரமன்தன்னை *
அன்று அமரர்க்கதிபதியும் அயனும் சேயும்
அடிபணிய , அணியழுந்தூர் நின்ற கோவை **
கன்றி நெடுவேல்வலவன் ஆலிநாடன் ,
கலிகன்றியொலிசெய்த இன்பப்பாடல்,
ஒன்றினொடு நான்கும் ஓரைந்தும்வல்லார்,
ஒலிகடல்சூழுலகாளும் உம்பர் தாமே. 10

அடிவரவு: செங்கமலம் முன் குலம் சிலம்பு சினம் வானவர் பந்து கும்பம் ஊடேறு பன்றி கள்ளம்

## *கள்ளம்மனம்* (7 - 9)

*(திருச்சிறுபுலியூர்)*

§ கள்ளம்மனம் விள்ளும்வகை , கருதிக்கழல் தொழுவீர் *
வெள்ளம் முதுபரவைத், திரைவிரிய ** கரையெங்கும்
தெள்ளும் மணிதிகழும் , சிறு புலியூர்ச்சலசயனத்
துள்ளும் * எனதுள்ளத்துள்ளும், உறைவாரைஉள்ளீரே. 1

தெருவில் திரி சிறுநோன்பியர், செஞ்சோற்றொடு கஞ்சி
மருவி * பிரிந்தவர் வாய்மொழி, மதியாது வந்தடைவீர்! **
திருவிற்பொலிமறையோர், சிறுபுலியூர்ச்சலசயனத்து *
உருவக்குறளடிகள் , அடியுணர்மின் உணர்வீரே. 2

பறையும் வினை தொழுதுய்மினீர், பணியும் சிறுதொண்டீர்!,
அறையும் புனலொருபால், வயலொருபால் பொழிலொருபால் **
சிறை வண்டினமறையும் , சிறுபுலியூர்ச்சலசயனத்து
உறையும் * இறையடியல்லது , ஒன்று இறையும் அறியேனே. 3

வானார்மதி பொதியும்சடை , மழுவாளியொடு ஒருபால் *
தானாகிய தலைவனவன் , அமரர்க்கதிபதியாம் **
தேனார்பொழில் தழுவும் , சிறுபுலியூர்ச்சலசயனத்து
ஆனாயனது *அடியல்லது, ஒன்று அறியேன்அடியேனே. 4

நந்தா நெடுநரகத்திடை, நணுகாவகை * நாளும்
எந்தாய்! என , இமையோர் தொழுதேத்துமிடம் ** எறிநீர்ச்
செந்தாமரை மலரும், சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அந்தாமரையடியாய்! , உனதடியேற்குஅருள்புரியே. 5

முழுநீலமும் மலராம்பலும், அரவிந்தமும் விரவி *
கழுநீரொடு மடவாரவர், கண்வாய்முகம் மலரும்**
செழுநீர்வயல்தழுவும், சிறுபுலியூர்ச்சலசயனம் *
தொழுநீர்மையதுடையார், அடிதொழுவார் துயரிலரே. 6

§ சேயோங்கு தண் , திருமாலிருஞ்சோலைமலை உறையும்
மாயா! * எனக்குரையாய் இது , மறைநான்கினுளாயோ? **
தீயோம்புகை மறையோர் , சிறுபுலியூர்ச்சலசயனத்
தாயோ? * உனதடியார் மனத்தாயோ? அறியேனே. 7

மையார் வரி நீலம், மலர்க்கண்ணார் மனம்விட்டிட்டு *
உய்வான் உனகழலே, தொழுதெழுவேன் ** கிளிமடவார்
செவ்வாய்மொழி பயிலும், சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஐவாயரவணைமேல் , உறைஅமலா! அருளாயே. 8

§ கருமா முகிலுருவா! , கனலுருவா! புனலுருவா! *
பெருமால்வரையுருவா!, பிறவுருவா! நினதுருவா **

திருமாமகள் மருவும் ,  சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அருமாகடலமுதே! , உனதடியே சரணாமே. 9

§ சீரார் நெடுமறுகில் , சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஏரார்முகில்வண்ணன்தனை , இமையோர் பெருமானை **
காரார் வயல்மங்கைக்கிறை , கலியனொலிமாலை *
பாராரிவை பரவித்தொழப் பாவம்பயிலாவே. 10

அடிவரவு::  கள்ளம் தெருவில் பறையும் வான் நந்தா முழு சேயோங்கு மையார் கரு சீரார் பெரும்புறம்.

## பெரும் புறக்கடல் (7 - 10)

*(திருக்கண்ணமங்கை)*

§ பெரும்புறக்கடலை அடலேற்றினைப்,
பெண்ணைஆணை * எண்ணில் முனிவர்க்கருள்
தருந்தவத்தை முத்தின் திரள்கோவையைப் ,
பத்தராவியை நித்திலத்தொத்தினை **
அரும்பினை அலரை அடியேன்மனத்தாசையை ,
அமுதம் பொதியின்சுவைக் *
கரும்பினைக்கனியைச்சென்று நாடிக்,
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 1

மெய்ந்நலத்தவத்தைத் திவத்தைத்தரும்,
மெய்யைப் பொய்யினைக், கையிலோர் சங்குடை*
மைந்நிறக்கடலைக் கடல்வண்ணனை ,
மாலை ஆலிலைப்பள்ளிகொள் மாயனை **
நென்னலைப்பகலை இற்றைநாளினை ,
நாளையாய் வரும் திங்களை ஆண்டினை*
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக்,
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 2

எங்களுக்கு அருள்செய்கின்ற ஈசனை,
வாசவார் குழலாள் மலைமங்கைதன்
பங்கனை * பங்கில் வைத்துகந்தான் தன்னைப்,
பான்மையைப் பனிமாமதியம் தவழ் **
மங்குலைச்சுடரை வடமாமலைஉச்சியை,
நச்சி நாம்வணங்கப்படும்
கங்குலை * பகலைச்சென்று நாடிக்,
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 3

பேய்முலைத்தலை நஞ்சுண்டபிள்ளையத் ,
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை *
மாயனை மதிள்கோவலிடைகழி மைந்தனை,
அன்றி அந்தணர் சிந்தையுள்
ஈசனை ** இலங்கும் சுடர்ச்சோதியை ,
எந்தையை எனக்கு எய்ப்பினில் வைப்பினை *
காசினை மணியைச்சென்று நாடிக்,
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 4

ஏற்றினை இமயத்துளெம்மீசனை,
இம்மையை மறுமைக்கு மருந்தினை *
ஆற்றலை அண்டத்தப்புறத்துய்த்திடும்
ஐயனைக் , கையிலாழியொன்றேந்திய
கூற்றினை ** குருமா மணிக்குன்றினை ,
நின்றவூர் நின்றநித்திலத்தொத்தினை *
காற்றினைப்புனலைச் சென்றுநாடிக் ,
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 5

துப்பனைத் துரங்கம் படச் சீறியதோன்றலைச்,
சுடர்வான்கலன் பெய்தது ஓர்
செப்பினை * திருமங்கை மணாளனைத் ,
தேவனைத்திகழும் பவளத்தொளி

ஒப்பனை ** உலகேழினை ஊழியை,
        ஆழியேந்திய கையனை அந்தணர்
கற்பினை * கழுநீர்மலரும் வயல் ,
        கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே. 6

திருத்தனைத் திசைநான்முகன் தந்தையைத் ,
        தேவதேவனை மூவரில்முன்னிய
விருத்தனை * விளங்கும் சுடர்ச்சோதியை ,
        விண்ணை மண்ணினைக் கண்ணுதல்கூடிய
அருத்தனை ** அரியைப் பரிகீறிய அப்பனை ,
        அப்பிலாரழலாய் நின்ற
கருத்தனை * களிவண்டறையும்பொழில் ,
        கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 7

வெஞ்சினக்களிற்றை விளங்காய்வீழக்,
        கன்றுவீசிய ஈசனை * பேய்மகள்
துஞ்ச நஞ்சு சுவைத்துண்டதோன்றலைத் ,
        தோன்றல் வாளரக்கன் கெடத்தோன்றிய
நஞ்சினை ** அமுதத்தினை நாதனை ,
        நச்சுவாருச்சிமேல் நிற்கும்நம்பியை *
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்தவஞ்சனைக் ,
        கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 8

பண்ணினைப் பண்ணில்நின்றதோர் பான்மையைப் ,
        பாலுள்நெய்யினை மாலுருவாய்நின்ற
விண்ணினை * விளங்குஞ்சுடர்ச்சோதியை ,
        வேள்வியை விளக்கினொளி தன்னை **
மண்ணினை மலையை அலை நீரினை ,
        மாலைமாமதியை மறையோர் தங்கள்
கண்ணினை * கண்களாரளவும் நின்று ,
        கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 9

§ கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று ,
        காதலால் கலிகன்றி உரைசெய்த *
வண்ணவொண்தமிழ் ஒன்பதோடொன்றிவை ,
        வல்லராயுரைப்பார் மதியம்தவழ் **
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர் ,
        மெய்ம்மை சொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ண! * நின்தனக்கும் குறிப்பாகில்
        கற்கலாம் , கவியின் பொருள் தானே. 10

அடிவரவு: பெரு மெய் எங்களுக்கு பேய் ஏற்றினை துப்பனை திருத்தனை வெஞ்சினம் பண்ணினை கண்ணமங்கையுள் சிலை




## சிலையிலங்கு (8 - 1)

*(திருக்கண்ணபுரம் - 1)*
*(தலைமகனிடத்து ஈடுபட்ட தலைமகளது செயல்கண்ட தாய் வியந்துகூறிய பாசுரம்)*

§ சிலையிலங்கு பொன்னாழி ,
        திண்படை தண்டு ஒண்சங்கமென்கின்றாளால் *
மலையிலங்கு தோள்நான்கே ,
        மற்றவனுக்கு எற்றே காண்! என்கின்றாளால் **
முலையிலங்கு பூம்பயலை ,
        முன்போட அன்போடியிருக்கின்றாளால் *
கலையிலங்கு மொழியாளர் ,
        கண்ணபுரத்தம்மானைக்கண்டாள் கொலோ?. 1

§ செருவரை முன்னாசறுத்த ,
        சிலையன்றோ! கைத்தலத்ததென்கின்றாளால் *
பொருவரை முன்போர்தொலைத்த ,
        பொன்னாழி மற்றொருகை என்கின்றாளால் **
ஒருவரையும் நின்னொப்பார் ,
        ஒப்பிலா என்னப்பா! என்கின்றாளால் *
கருவரைபோல் நின்றானைக் ,
        கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ?. 2

துன்னு மாமணி முடிமேல் ,
துழாயலங்கல் தோன்றுமாலென்கின்றாளால் *
மின்னுமாமணிமகர குண்டலங்கள்,
வில்வீசுமென்கின்றாளால் **
பொன்னின் மாமணியாரம் ,
அணியாகத்து இலங்குமாலென்கின்றாளால் *
கன்னிமாமதிள் புடைசூழ் ,
கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ?. 3

தாராயதண்துளப , வண்டுழுத-
வரைமார்பன் என்கின்றாளால் *
போரானைக்கொம்பொசித்த ,
புட்பாகன் என்னம்மான் என்கின்றாளால் **
ஆரானும் காண்மின்கள் ,
அம்பவளம் வாயவனுக்கென்கின்றாளால் *
கார்வானம் நின்றதிரும்,
கண்ணபுரத்து அம்மானைக் கண்டாள் கொலோ?. 4

அடித்தலமும் தாமரையே ,
அங்கைகளும் பங்கயமே என்கின்றாளால் *
முடித்தலமும் பொற்பூணும் ,
என்நெஞ்சத்துள்ளகலாது என்கின்றாளால் **
வடித்தடங்கண் மலரவளோ ,
வரையாகத்து உள்ளிருப்பாள்? என்கின்றாளால் *
கடிக்கமலம் கள்ளுகுக்கும் ,
கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ!. 5

பேராயிரமுடையபேராளன் ,
பேராளனென்கின்றாளால் *
ஏரார் கனமகரகுண்டலத்தன்,
எண்தோளன் என்கின்றாளால் **

நீரார் மழைமுகிலே ,
நீள்வரையே ஒக்குமாலென்கின்றாளால் *
காரார்வயலமரும் ,
கண்ணபுரத்தம்மானைக் கண்டாள் கொலோ!. 6

செவ்வரத்தவுடையாடை , அதன்மேலோர்
சிவளிகைக்கச்சு என்கின்றாளால் *
அவ்வரத்த அடியிணையும் ,
அங்கைகளும் பங்கயமேயென்கின்றாளால் **
மைவளர்க்கும் மணியுருவம் ,
மரகதமோ! மழை முகிலோ! என்கின்றாளால்*
கைவளர்க்கும் அழலாளர் ,
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள் கொலோ?. 7

கொற்றப்புள் ஒன்றேறி மன்றூடே,
வருகின்றானென்கின்றாளால் *
வெற்றிப்போரிந்திரற்கும் ,
இந்திரனேயொக்குமால்என்கின்றாளால் **
பெற்றக்கால் அவனாகம் ,
பெண்பிறந்தோம் உய்யோமோ? என்கின்றாளால் *
கற்றநூல் மறையாளர் ,
கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ?. 8

வண்டமரும் வனமாலை ,
மணிமுடிமேல் மணநாறும் என்கின்றாளால் *
உண்டிவர்பால் அன்பெனக்கென்று ,
ஒருகாலும்பிரிகிலேன் என்கின்றாளால் **
பண்டிவரைக்கண்டறிவது எவ்வூரில்,
யாமென்றே பயில்கின்றாளால் *
கண்டவர்தம் மனம் வழங்கும் ,
கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ?. 9

§ மாவளரு மென்னோக்கி ,
மாதராள் மாயவனைக்கண்டாளென்று *
காவளரும் கடிபொழில்சூழ் ,
கண்ணபுரத்தம்மானைக்கலியன் சொன்ன **
பாவளரும் தமிழ் மாலை ,
பன்னியநூல் இவையைந்துமைந்தும்வல்லார் *
பூவளரும் கற்பகம்சேர் ,
பொன்னுலகில் மன்னவராய்ப்புகழ் தக்கோரே. 10

அடிவரவு: சிலை செருவரை துன்னு தார் அடி பேர் செவ்வரத்த கொற்றம் வண்டு மாவளரும் தெள்ளியீர்.

# *தெள்ளியீர்* (8 - 2)

*( திருக்கண்ணபுரம் - 2 )*

*(தலைவியின் நிலைகண்ட தாய் தலைமகனை இயற்பழித்தும் தலைமகளது இளமைக்கு இரங்கியும் கூறிய பாசுரம்)*

§தெள்ளியீர்!, தேவர்க்கும் தேவர் திருத்தக்கீர்! *
வெள்ளியீர், வெய்யவிழுநிதி வண்ணர் ** ஓ !
துள்ளு நீர்க் , கண்ணபுரம் தொழுதாளிவள்
கள்வியோ ! * கைவளை கொள்வது தக்கதே?. 1

நீணிலா முற்றத்து, நின்று இவள் நோக்கினாள் *
காணுமோ!, கண்ணபுரமென்று காட்டினாள் **
பாணனார் திண்ணமிருக்க , இனி இவள்
நாணுமோ? * நன்று நன்று, நறையூரர்க்கே. 2

§ அருவிசோர்வேங்கடம் , நீர்மலை யென்றுவாய்
வெருவினாள் * மெய்யம் வினவியிருக்கின்றாள் **
பெருகுசீர்க், கண்ணபுரமென்று பேசினாள்
உருகினாள் * உள் மெலிந்தாள் , இது என்கொலோ?. 3

உண்ணும் நாளில்லை , உறக்கமும் தானில்லை *
பெண்மையும்சால , நிறைந்திலள் பேதைதான் **

கண்ணனூர் கண்ணபுரம் தொழும் , கார்க்கடல்
வண்ணர்மேல் * எண்ணம் இவட்கு இதுஎன்கொலோ?. 4

கண்ணனூர், கண்ணபுரம்தொழும் காரிகை *
பெண்மையும் தன்னுடை , உண்மை உரைக்கின்றாள் **
வெண்ணெயுண்டு ஆப்புண்ட, வண்ணம் விளம்பினால் *
வண்ணமும், பொன்னிறமாவதொழியுமே. 5

வடவரை நின்றும்வந்து, இன்றுகணபுரம் *
இடவகை கொள்வது , யாமென்று பேசினாள் **
மடவரல்மாதர் என்பேதை, இவர்க்கு இவள்
கடவதென்? * கண்துயில், இன்று இவர்கொள்ளவே. 6

§ தரங்கநீர் பேசினும், தண்மதி காயினும் *
இரங்குமோ? , எத்தனை நாளிருந்து எள்கினாள்? **
துரங்கம்வாய் கீண்டு உகந்தானது , தொன்மையூர் *
அரங்கமேயென்பது , இவள் தனக்கு ஆசையே. 7

தொண்டெல்லாம் நின்னடியே, தொழுதுய்யுமா
கண்டு * தான் கணபுரம் , தொழப்போயினாள் **
வண்டுலாம் கோதை என்பேதை , மணி நிறம்
கொண்டுதான் * கோயின்மை செய்வது, தக்கதே?. 8

முள்ளெயிறு ஏய்ந்தில, கூழை முடிகொடா *
தெள்ளியளென்பதோர் , தேசிலள் என்செய்கேன் ? **
கள்ளவிழ் சோலைக், கணபுரம் கைதொழும்
பிள்ளையை * பிள்ளையென்றெண்ணப் பெறுவரே?. 9

§ கார்மலி , கண்ணபுரத்தெம்மடிகளை *
பார்மலி மங்கையர்கோன், பரகாலன் சொல் **
சீர்மலி பாடல் , இவைபத்தும் வல்லவர் *
நீர்மலிவையத்து , நீடுநிற்பார்களே. 10

அடிவரவு: தெள்ளியீர் நீணிலா அருவி உண்ணும் கண்ணன் வடவரை தரங்கம் தொண்டு முள் கார் கரை.

# கரையெடுத்த (8 - 3)

*(திருக்கண்ணபுரம் - 3)*
*(தலைமகனைப் பிரிந்த தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்;அறத்தோடு நிற்றல்)*

§ கரையெடுத்த சுரிசங்கும் , கனபவளத்தெழுகொடியும் *
திரையெடுத்து வருபுனல்சூழ் , திருக்கண்ணபுரத்துறையும் **
விரைஎடுத்த துழாயலங்கல் , விறல்வரைத்தோள் புடைபெயர *
வரைஎடுத்த பெருமானுக்கு , இழந்தேன் என்வரிவளையே. 1

அரிவிரவு முகிற்கணத்தால் , அகிற்புகையால் வரையோடும் *
தெரிவரிய மணிமாடத் , திருக்கண்ணபுரத்துறையும் **
வரியரவினணைத்துயின்று , மழைமதத்த சிறுதறுகண் *
கரி வெருவ மருப்பொசித்தாற்கு , இழந்தேன் என்கனவளையே. 2

துங்கமாமணிமாட , நெடுமுகட்டின்சூலிகைபோம் *
திங்கள் மாமுகில் துணிக்கும் , திருக்கண்ணபுரத்துறையும் **
பைங்கண்மால் விடையடர்த்துப் , பனிமதிகோள் விடுத்துகந்த *
செங்கண்மாலம்மானுக்கு, இழந்தேன் என் செறிவளையே. 3

கணமருவு மயிலகவு , கடிபொழில்சூழ் நெடுமறுகில் *
திணமருவு கனமதிள்சூழ் , திருக்கண்ணபுரத்துறையும் **
மணமருவுதோளாய்ச்சி , ஆர்க்கப்போய் * உரலோடும்
புணர்மருதம் இறநடந்தாற்கு , இழந்தேன் என்பொன்வளையே. 4

வாயெடுத்த மந்திரத்தால் , அந்தணர்தம் செய்தொழில்கள் *
தீயெடுத்து மறைவளர்க்கும், திருக்கண்ணபுரத்துறையும் **
தாயெடுத்த சிறுகோலுக்கு , உளைந்தோடி தயிருண்ட *
வாய்துடைத்த மைந்தனுக்கு , இழந்தேன் என்வரிவளையே. 5

மடலெடுத்த நெடுந்தாழை , மருங்கெல்லாம் வளர்பவளம் *
திடலெடுத்துச்சுடரிமைக்கும் , திருக்கண்ணபுரத்துறையும் **
அடலடர்த்து அன்றிரணியனை , முரணழிய அணியுகிரால் *
உடலெடுத்த பெருமானுக்கு , இழந்தேன் என் ஒளிவளையே. 6

வண்டமரும் மலர்ப்புன்னை , வரிநீழல் அணிமுத்தம் *
தெண்திரைகள் வரத்திரட்டும் , திருக்கண்ணபுரத்துறையும் **
எண்திசையும் எழுசுடரும் , இருநிலனும் பெருவிசும்பும் *
உண்டுமிழ்ந்த பெருமானுக்கு , இழந்தேன் என்ஒளிவளையே. 7

கொங்குமலி கருங்குவளை , கண்ணாக தெண்கயங்கள் *
செங்கமல முகமலர்த்தும் , திருக்கண்ணபுரத்துறையும் **
வங்கமலிதடங்கடலுள் , வரியரவினணைத்துயின்ற *
செங்கமலநாபனுக்கு , இழந்தேன் என் செறிவளையே. 8

வாராளும் இளங்கொங்கை , நெடும்பணைத்தோள் மடப்பாவை *
சீராளும் வரைமார்வன் , திருக்கண்ணபுரத்துறையும் **
பேராளன் ஆயிரம் பேர் , ஆயிரவாயரவணைமேல் *
பேராளர் பெருமானுக்கு , இழந்தேன் என் பெய்வளையே. 9

§ தேமருவுபொழில் புடைசூழ் , திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை * மறிகடல்சூழ் , வயலாலி வளநாடன் **
காமருசீர்க் கலிகன்றி , கண்டுரைத்த தமிழ்மாலை *
நாமருவி இவைபாட , வினையாய நண்ணாவே. 10

அடிவரவு: கரை அரி துங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாராளும் தேமருவு விண்ணவர்

## *விண்ணவர்* (8 - 4)

*( திருக்கண்ணபுரம் - 4 )*
*(தலைமகனிடத்து ஈடுபட்ட தலைவி ஆற்றாது தும்பியை நோக்கிக் கூறிய பாசுரம்)*

§ விண்ணவர் தங்கள்பெருமான் , திருமார்வன் *
மண்ணவரெல்லாம் வணங்கும் , மலிபுகழ் சேர் **
கண்ணபுரத்தெம்பெருமான் , கதிர் முடிமேல் *
வண்ணநறுந்துழாய் , வந்தூதாய் கோல்தும்பீ!. 1

வேதமுதல்வன் , விளங்கு புரிநூலன் *
பாதம்பரவிப் , பலரும் பணிந்தேத்தி **

காதன்மை செய்யும் , கண்ணபுரத்தெம்பெருமான் *
தாதுநறுந்துழாய் , தாழ்ந்தூதாய் கோல்தும்பீ!. 2

விண்ட மலரெல்லாம் , ஊதி நீஎன்பெறுதி? *
அண்டமுதல்வன் , அமரர்களெல்லாரும் **
கண்டுவணங்கும் , கண்ணபுரத்தெம்பெருமான் *
வண்டுநறுந்துழாய் , வந்தூதாய் கோல்தும்பீ!. 3

நீர் மலிகின்றது ஓர் , மீனாய் ஓராமையுமாய் *
சீர்மலிகின்றது ஓர் , சிங்கஉருவாகி **
கார்மலிவண்ணன் , கண்ணபுரத்தெம்பெருமான் *
தார்மலிதண்துழாய் , தாழ்ந்தூதாய் கோல்தும்பீ!. 4

ஏரார்மலரெல்லாம் , ஊதி நீ என்பெறுதி? *
பாராருலகம் , பரவப்பெருங்கடலுள் **
கார் ஆமையான , கண்ணபுரத்தெம்பெருமான் *
தாரார் நறுந்துழாய் , தாழ்ந்தூதாய் கோல்தும்பீ!. 5

மார்வில்திருவன் , வலனேந்து சக்கரத்தன் *
பாரைப்பிளந்த , பரமன்பரஞ்சோதி **
காரில்திகழ் , காயாவண்ணன் கதிர்முடிமேல் *
தாரில் நறுந்துழாய் , தாழ்ந்தூதாய் கோல்தும்பீ!. 6

வாமனன் கற்கி , மதுசூதன் மாதவன் *
தார்மன்னு , தாசரதியாய தடமார்வன் **
காமன் தன்தாதை , கண்ணபுரத்தெம்பெருமான் *
தாமநறுந்துழாய் , தாழ்ந்தூதாய் கோல்தும்பீ!. 7

நீல மலர்கள் , நெடுநீர்வயல்மருங்கில் *
சால மலரெல்லாம் , ஊதாதே ** வாளரக்கர்
காலன் , கண்ணபுரத்தெம்பெருமான் கதிர்முடிமேல் *
கோல நறுந்துழாய் , கொண்டூதாய் கோல்தும்பீ!. 8

நந்தன் மதலை , நிலமங்கை நல் துணைவன் *
அந்தமுதல்வன் , அமரர்கள் தம்பெருமான் **
கந்தம்கமழ் , காயாவண்ணன் கதிர்முடிமேல் *
கொந்துநறுந்துழாய் , கொண்டூதாய் கோல்தும்பீ!. 9

§ வண்டமரும்சோலை , வயலாலி நல்நாடன் *
கண்ட சீர் வென்றிக் , கலியனொலி மாலை **
கொண்டல் நிறவண்ணன் , கண்ணபுரத்தானை *
தொண்டரோம் பாட , நினைந்தூதாய் கோல்தும்பீ!. 10

அடிவரவு: விண்ணவர் வேதம் விண்ட நீர் ஏரார் மார்வில் வாமனன் நீலம் நந்தன் வண்டமரும் தந்தை.

## தந்தை காலில் (8 - 5)

*( திருக்கண்ணபுரம் - 5 )*
*(தலைவனைப் பிரிந்த தலைவி அந்திப்பொழுதில் தலைவன் வாராது தாழ்த்த, தென்றல் முதலியவற்றால் வருந்திக் கூறுதல்)*

§ தந்தை காலில் விலங்கற ,
வந்துதோன்றிய தோன்றல்பின் * தமியேன்தன்
சிந்தை போயிற்றுத் , திருவருள் அவனிடைப்
பெறுமளவு இருந்தேனை **
அந்திகாவலன் அமுதுறு பசுங்கதிர்
அவைசுட , அதனோடும் *
மந்தமாருதம் வனமுலை தடவந்து ,
வலி செய்வதொழியாதே!. 1

மாரிமாக்கடல் வளைவணற்கிளையவன் ,
வரைபுரை திருமார்பில் *
தாரினாசையில் போயினநெஞ்சமும் ,
தாழ்ந்தது ஓர் துணை காணேன் **
ஊரும்துஞ்சிற்று உலகமும் துயின்றது ,
ஒளியவன் விசும்பியங்கும் *
தேரும் போயிற்றுத்திசைகளும் மறைந்தன ,
செய்வதொன்றறியேனே!. 2

ஆயன் மாயமேயன்றி மற்றென்கையில் ,
வளைகளும் இறைநில்லா *
பேயின்ஆருயிர் உண்டிடும்பிள்ளை ,
நம் பெண்ணுயிர்க்கு இரங்குமோ? **
தூயமாமதிக்கதிர் சுடத்துணையில்லை ,
இணைமுலை வேகின்றதால் *
ஆயன் வேயினுக்கழிகின்றது உள்ளமும் ,
அஞ்சேலென்பார் இலையே!. 3

கயங்கொள் புண்தலைக்களிறுந்து வெந்திறல் ,
கழல்மன்னர் பெரும்போரில் *
மயங்க வெண்சங்கம் வாய்வைத்தமைந்தனும் ,
வந்திலன் மறிகடல் நீர் **
தயங்கு வெண்திரைத்திவலை நுண்பனியெனும் ,
தழல்முகந்து இளமுலைமேல் *
இயங்குமாருதம் விலங்கில் என்னாவியை ,
எனக்கெனப் பெறலாமே!. 4

ஏழுமாமரம் துளைபடச்சிலைவளைத்து ,
இலங்கையை மலங்குவித்த
ஆழியான் * நமக்கருளிய அருளொடும் ,
பகலெல்லை கழிகின்றதால் **
தோழி! நாம் இதற்கென் செய்தும்?,
துணையில்லை , சுடர்படுமுதுநீரில் *
ஆழஆழ்கின்ற ஆவியை , அடுவதோர்
அந்திவந்தடைகின்றதே!. 5

முரியும் வெண்திரை முதுகயம்தீப்பட ,
முழங்கழலெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலை வளைவித்த ,
மைந்தனும் வந்திலன் என்செய்கேன் **

எரியும் வெங்கதிர்துயின்றது ,
பாவியேன் இணை நெடுங்கண்துயிலா *
கரியநாழிகை ஊழியின்பெரியன ,
கழியுமாறு அறியேனே!. 6

கலங்கமாக்கடல் கடைந்தடைத்து ,
இலங்கையர்கோனது வரையாகம்
மலங்க * வெஞ்சமத்து அடுசரம் துரந்த ,
எம்மடிகளும் வாரானால் **
இலங்கு வெங்கதிரிளமதி அதனொடும் ,
விடைமணியடும் * ஆயன்
விலங்கல்வேயினது ஓசையுமாய் ,
இனி விளைவதொன்று அறியேனே!. 7

முழுதிவ்வையகம் முறைகெட மறைதலும் ,
முனிவனும் முனிவெய்தி *
மழுவினால் மன்னராருயிர் வவ்விய ,
மைந்தனும் வாரானால் **
ஒழுகு நுண்பனிக்கு ஒடுங்கிய பேடையை ,
அடங்க அஞ்சிறை கோலி *
தழுவு நள்ளிருள் தனிமையின் கடியது ஓர் ,
கொடுவினை அறியேனே!. 8

கனஞ்செய் மாமதிள் கணபுரத்தவனோடும் ,
கனவினில் அவன் தந்த *
மனஞ்செய்யின்பம் வந்துஉள்புக வெள்கி ,
என்வளை நெகஇருந்தேனை **
சினஞ்செய் மால்விடைச்சிறுமணியோசை ,
என் சிந்தையைச்சிந்துவிக்கும் *
அனந்தலன்றிலின்அரிகுரல் ,
பாவியேனாவியை அடுகின்றதே!. 9

§ வார்கொள் மென்முலை மடந்தையர் ,
தடங்கடல்வண்ணனைத்தாள்நயந்து *
ஆர்வத்தாலவர் புலம்பியபுலம்பலை ,
அறிந்து முன் உரைசெய்த **
கார்கொள் பைம்பொழில் மங்கையர் காவலன் ,
கலிகன்றி ஒலிவல்லார் *
ஏர்கொள் வைகுந்தமாநகர்புக்கு ,
இமையவரொடும் கூடுவரே!. 10

அடிவரவு: தந்தை மாரி ஆயன் கயம் ஏழு முரியும் கலங்க முழுது கனஞ்செய் வார்கொள் தொண்டீர்

## தொண்டீர் (8 - 6)

*( திருக்கண்ணபுரம் - 6 )*

§ தொண்டீர்! உய்யும்வகை கண்டேன் , துளங்காஅரக்கர்துளங்க * முன்
திண்தோள் நிமிரச்சிலைவளையச் , சிறிதே முனிந்த திருமார்பன் **
வண்டார் கூந்தல் மலர்மங்கை, வடிக்கண்மடந்தை மான்நோக்கம்
கண்டாள் * கண்டு கொண்டுகந்த, கண்ணபுரம் நாம்தொழுதுமே. 1

பொருந்தா அரக்கர் வெஞ்சமத்துப் , பொன்ற அன்று புள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலி தலைபுரளப் , பேர்ந்த அரக்கர் தென்னிலங்கை **
இருந்தார் தம்மையுடன் கொண்டு, அங்கு எழிலார் பிலத்துப்புக்கொளிப்ப *
கருந்தாள் சிலைகைக்கொண்டானூர், கண்ணபுரம் நாம்தொழுதுமே. 2

வல்லியிடையாள் பொருட்டாக , மதிள்நீரிலங்கையார் கோவை *
அல்லல் செய்து வெஞ்சமத்துள் , ஆற்றல் மிகுத்த ஆற்றலான் **
வல்லாளரக்கர் குலப்பாவை வாட, முனி தன்வேள்வியை *
கல்விச்சிலையால் காத்தானூர் , கண்ணபுரம் நாம்தொழுதுமே. 3

மல்லை முந்நீர் அதர்பட, வரிவெஞ்சிலை கால்வளைவித்து *
கொல்லைவிலங்கு பணிசெய்யக் , கொடியோன் இலங்கை புகலுற்று **
தொல்லைமரங்கள் புகப்பெய்து , துவலை நிமிர்ந்துவானணவ *
கல்லால் கடலையடைத்தானூர் , கண்ணபுரம் நாம்தொழுதுமே. 4

ஆமையாகி அரியாகி , அன்னமாகி * அந்தணர் தம்
ஓமமாகி ஊழியாகி, உலகு சூழ்ந்த நெடும்புணரி **
சேமமதிள் சூழிலங்கைக்கோன் , சிரமும் கரமும்துணித்து * முன்
காமற்பயந்தான் கருதுமூர் , கண்ணபுரம் நாம்தொழுதுமே. 5

வருந்தாதிரு நீ மடநெஞ்சே! , நம்மேல் வினைகள்வாரா * முன்
திருந்தாஅரக்கர் தென்னிலங்கை , செந்தீயுண்ணச் சிவந்து ஒரு நாள் **
பெருந்தோள் வாணற்கு அருள் புரிந்து , பின்னைமணாளனாகி * முன்
கருந்தாள் களிறொன்றொசித்தானூர் , கண்ணபுரம் நாம்தொழுதுமே 6

இலையார் மலர்ப்பூம்பொய்கைவாய் , முதலைதன்னால் அடர்ப்புண்டு *
கொலையார்வேழம் நடுக்குற்றுக்குலைய , அதனுக்கு அருள் புரிந்தான் **
அலைநீரிலங்கைத் தசக்கிரீவற்கு , இளையோற்கு அரசையருளி * முன்
கலைமாச்சிலையால் எய்தானூர் , கண்ணபுரம் நாம்தொழுதுமே. 7

மாலாய் மனமே! அருந்துயரில் , வருந்தாதிரு நீ * வலிமிக்க
காலார்மருதும் காய்சினத்த கழுதும் , கதமாக் கழுதையும் **
மாலார்விடையும் மதகரியும் , மல்லர் உயிரும் மடிவித்து *
காலால்சகடம் பாய்ந்தானூர் , கண்ணபுரம் நாம் தொழுதுமே. 8

குன்றால் மாரிபழுதாக்கிக் , கொடியேரிடையாள் பொருட்டாக *
வன்தாள்விடையேழ் அன்றடர்த்த , வானோர் பெருமான் மாமாயன் **
சென்றான் தூதுபஞ்சவர்க்காய்த் , திரிகாற்சகடம் சினமழித்து *
கன்றால் விளங்காயெறிந்தானூர் , கண்ணபுரம் நாம் தொழுதுமே. 9

§ கருமாமுகில் தோய் நெடுமாடக் , கண்ணபுரத்தெம்மடிகளை *
திருமாமகளால் அருள்மாரி , செழுநீராலி வளநாடன் **
மருவார் புயல்கைக்கலிகன்றி , மங்கை வேந்தனொலிவல்லார்*
இருமாநிலத்துக்கரசாகி , இமையோர்இறைஞ்ச வாழ்வாரே. 10

அடிவரவு: தொண்டீர் பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாது இலியமால் குன்றால் கருமா வியம்

# வியமுடை (8 - 7)

*( திருக்கண்ணபுரம் - 7 )*

§ வியமுடை விடையினம் , உடைதர மடமகள் *
குயமிடை தடவரை , அகலமது உடையவர் **
நயமுடை நடையனம் , இளையவர் நடைபயில் *
கயமிடை கணபுரம் , அடிகள் தம் இடமே. 1

இணைமலி மருதினொடு , எருதிற இகல் செய்து *
துணைமலி முலையவள் , மணமிகு கலவியுள் **
மணமலி விழவினோடு , அடியவரளவிய *
கணமலிகணபுரம் , அடிகள் தம்இடமே. 2

புயலுறு வரைமழை , பொழிதர மணி நிரை *
மயலுற வரைகுடை , எடுவிய நெடியவர் **
முயல்துளர் மிளைமுயல் துள , வளவிளைவயல் *
கயல்துளு கணபுரம் , அடிகள்தம் இடமே. 3

ஏதலர் நகைசெய , இளையவர் அளைவெணெய் *
போது செய்தமரிய, புனிதர் நல்விரைமலர் **
கோதிய மதுகரம் , குலவிய மலர்மகள் *
காதல் செய்கணபுரம் , அடிகள்தம் இடமே 4

தொண்டரும் அமரரும் , முனிவரும் தொழுதெழ *
அண்டமொடு அகலிடம் , அளந்தவர் அமர்செய்து **
விண்டவர் பட , மதிளிலங்கைமுன் எரியெழ *
கண்டவர் கணபுரம் , அடிகள்தம் இடமே. 5

மழுவியல் படையுடை அவனிடம், மழைமுகில் *
தழுவிய உருவினர் , திருமகள் மருவிய **
கொழுவிய செழுமலர் , முழுசியபறவைபண் *
எழுவிய கணபுரம் , அடிகள்தம் இடமே. 6

பரிதியொடு அணிமதி , பனிவரை திசை நிலம் *
எரிதியொடு எனவின , இயல்வினர் செலவினர் **
சுருதியொடு அருமறை , முறை சொலும் அடியவர் *
கருதிய கணபுரம் , அடிகள்தம் இடமே. 7

படிபுல்கும் அடியிணை , பலர்தொழ மலர்வைகு *
கொடிபுல்கு தடவரை , அகலமது உடையவர் **
முடிபுல்கு நெடுவயல் , படைசெலஅடிமலர் *
கடிபுல்கு கணபுரம் , அடிகள் தம் இடமே. 8

புலமனு மலர்மிசை, மலர்மகள் புணரிய *
நிலமகளென, இனமகளிர்கள் இவரொடும் **
வலமனு படையுடை , மணிவணர் நிதிகுவை *
கலமனு கணபுரம் , அடிகள்தம் இடமே. 9

§ மலிபுகழ் கணபுரமுடைய , எம்அடிகளை *
வலிகெழு மதிளயல் , வயலணி மங்கையர் **
கலியன தமிழிவை , விழுமிய இசையினொடு *
ஒலிசொலும் அடியவர் , உறுதுயரிலரே. 10

அடிவரவு: வியம் இணை புயல் ஏதலர் தொண்டர் மழு பரிதியொடு படிபுலம் மலிபுகழ் வானோர்.

## வானோரளவும் (8 - 8)

*( திருக்கண்ணபுரம் - 8 )*
*(தசாவதாரம்)*

§ வானோரளவும் முதுமுந்நீர், வளர்ந்த காலம் * வலியுருவின்
மீனாய்வந்து வியந்துய்யக்கொண்ட , தண்தாமரைக்கண்ணன் **
ஆனாவுருவில் ஆனாயன் , அவனை அம்மாவிளைவயலுள் *
கானார்புறவிற் கண்ணபுரத்து , அடியேன் கண்டு கொண்டேனே. 1

மலங்குவிலங்கு நெடுவெள்ளம் மறுக , அங்குஓர் வரை நட்டு *
இலங்கு சோதியாரமுதம் , எய்துமளவு ஓர் ஆமையாய்**

விலங்கல் திரியத் தடங்கடலுள் , சுமந்துகிடந்த வித்தகனை *
கலங்கல் முந்நீர்க் கண்ணபுரத்து , அடியேன் கண்டு கொண்டேனே 2

பாராரளவும் முதுமுந்நீர் , பரந்த காலம் * வளை மருப்பில்
ஏராருருவத்தேனமாய் , எடுத்த ஆற்றலம்மானை **
கூரார் ஆரலிரைகருதிக் , குருகு பாயக்கயலிரியும் *
காரார்புறவில் கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 3

உளைந்த அரியும் மானிடமும் , உடனாய்த்தோன்ற ஒன்றுவித்து *
விளைந்தசீற்றம் விண்வெதும்ப , வேற்றோனகலம்வெஞ்சமத்து **
பிளந்துவளைந்த உகிரானைப் , பெருந்தண் செந்நெற்குலைதடிந்து *
களஞ்செய்புறவிற்கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 4

தொழுநீர் வடிவில் குறளுருவாய் , வந்துதோன்றி மாவலிபால் *
முழுநீர்வையம் முன்கொண்ட , மூவாவுருவினம்மானை **
உழுநீர்வயலுள் பொன்கிளைப்ப , ஒருபால் முல்லைமுகையோடும் *
கழுநீர்மலரும் கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 5

வடிவாய் மழுவே படையாக , வந்து தோன்றி மூவெழுகால் *
படியாரரசு களைகட்ட , பாழியானை அம்மானை **
குடியா வண்டுகொண்டுண்ணக் , கோல நீலம் மட்டுகுக்கும் *
கடியார் புறவிற்கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 6

வையமெல்லாம் உடன்வணங்க , வணங்கா மன்னனாய்த் தோன்றி *
வெய்ய சீற்றக்கடியிலங்கை , குடிகொண்டோட வெஞ்சமத்து **
செய்தவெம்போர் நம்பரனைச் , செழுந்தண்கானல் மணநாறும் *
கைதை வேலிக்கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 7

ஒற்றைக்குழையும் நாஞ்சிலும் , ஒருபால் தோன்றத்தான்தோன்றி *
வெற்றித்தொழிலார் வேல்வேந்தர் , விண்பால் செல்ல வெஞ்சமத்து **
செற்ற கொற்றத்தொழிலானைச் , செந்தீமூன்றும் இல்லிருப்ப *
கற்றமறையோர் கண்ணபுரத்து , அடியேன் கண்டுகொண்டேனே. 8

**துவரிக்கனிவாய் நிலமங்கை , துயர்தீர்ந்துய்யப் பாரதத்துள் ***
**இவரித்தரசர் தடுமாற , இருள்நாள் பிறந்த அம்மானை ****
**உவரியோதம் முத்துந்த , ஒருபால் ஒருபாலொண் செந்நெல் ***
**கவரிவீசும் கண்ணபுரத்து, அடியேன் கண்டு கொண்டேனே.** 9

**§ மீனோடு ஆமை கேழல் அரிகுறளாய் , முன்னும் இராமனாய்த்**
**தானாய் * பின்னும் இராமனாய்த்தாமோதரனாய்க் , கற்கியும்**
**ஆனான் தன்னை ** கண்ணபுரத்து அடியேன் , கலியனொலி செய்த ***
**தேனார் இன்சொல் தமிழ்மாலை , செப்பப்பாவம் நில்லாவே.** 10

அடிவரவு: வானோர் மலங்கு பார் உளைந்த தொழு வடி வையம் ஒற்றை
துவரி மீனோடு கைம்மானம்

## *கைம்மானம்* (8 - 9)

*( திருக்கண்ணபுரம் - 9 )*

**§ கைம்மான மதயானை , இடர்தீர்த்தகருமுகிலை ***
**மைம்மான மணியை , அணிகொள்மரதகத்தை ****
**எம்மானை எம்பிரானை ஈசனை, என்மனத்துள்**
**அம்மானை * அடியேன் அடைந்துய்ந்து போனேனே.** 1

**தருமான மழைமுகிலைப் , பிரியாது தன்னடைந்தார் ***
**வருமானம் தவிர்க்கும் , மணியை அணியுருவில் ****
**திருமாலை அம்மானை அமுதத்தைக் , கடல்கிடந்த**
**பெருமானை * அடியேன், அடைந்துய்ந்து பிழைத்தேனே.** 2

**விடையேழன்றடர்த்து , வெகுண்டு விலங்கலுற ***
**படையால் ஆழிதட்ட , பரமன் பரஞ்சோதி ****
**மடையார் நீலம்மல்கும் வயல்சூழ் , கண்ணபுரமொன்று**
**உடையானுக்கு * அடியேன், ஒருவர்க்கு உரியேனோ?.** 3

**§ மிக்கானை , மறையாய் விரிந்த விளக்கை * என்னுள்**
**புக்கானைப் , புகழ்சேர்பொலிகின்ற பொன்மலையை ****

தக்கானைக் , கடிகைத்தடங்குன்றின் மிசையிருந்த *
அக்காரக்கனியை , அடைந்துய்ந்து போனேனே. 4

வந்தாய் என்மனத்தே , வந்துநீ புகுந்தபின்னை *
எந்தாய்! போயறியாய் , இதுவே அமையாதோ? **
கொந்தார் பைம்பொழில்சூழ் , குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா! * உன்னை என்றும் , மறவாமைப் பெற்றேனே. 5

எஞ்சாவெந்நரகத்து , அழுந்தி நடுங்குகின்றேற்கு *
அஞ்சேலென்று அடியேனை , ஆட்கொள்ள வல்லானை **
நெஞ்சே! நீ நினையாது , இறைப்பொழுதும் இருத்திகண்டாய் *
மஞ்சார்மாளிகைசூழ், வயலாலி மைந்தனையே. 6

பெற்றார் பெற்றொழிந்தார், பின்னும் நின்று அடியேனுக்கு *
உற்றானாய் வளர்த்து , என்னுயிராகி நின்றானை **
முற்றாமாமதிகோள் , விடுத்தானை எம்மானை *
எத்தால்யான் மறக்கேன்? , இதுசொல் என் ஏழை நெஞ்சே!. 7

கற்றார் பற்றறுக்கும் , பிறவிப்பெருங்கடலே *
பற்றாவந்து அடியேன், பிறந்தேன் பிறந்தபின்னை **
வற்றாநீர்வயல்சூழ், வயலாலியம்மானைப்
பெற்றேன் * பெற்றதும், பிறவாமை பெற்றேனே. 8

கண்ணார் கண்ணபுரம் , கடிகைகடிகமழும் *
தண்ணார் தாமரைசூழ் , தலைச்சங்க மேல்திசையுள் **
விண்ணோர்நாண்மதியை , விரிகின்ற வெஞ்சுடரை *
கண்ணாரக்கண்டு கொண்டு , களிக்கின்றதுஇங்கு என்றுகொலோ? 9

§ செருநீரவேல்வலவன் , கலிகன்றிமங்கையர்கோன் *
கருநீர்முகில்வண்ணன் , கண்ணபுரத்தானை **
இருநீர் இன்தமிழ் , இன்னிசை மாலைகள் கொண்டுதொண்டீர்! *
வருநீர்வையமுய்ய , இவைபாடியாடுமினே. 10

அடிவரவு: கைம்மானம் தரு விடை மிக்கானை வந்தாய் எஞ்சா பெற்றார் கற்றார் கண்ணார் செரு வண்டார்

# வண்டார் (8 - 10)

*( திருக்கண்ணபுரம் - 10 )*

§ வண்டார் பூ மாமலர்மங்கை , மணநோக்கம்
உண்டானே! * உன்னைஉகந்துகந்து , உன்தனக்கே
தொண்டானேற்கு ** என் செய்கின்றாய்? சொல்லு , நால்வேதம்
கண்டானே! * கண்ணபுரத்துறையம்மானே!. 1

பெருநீரும் விண்ணும் , மலையும் உலகேழும் *
ஒருதாராநின்னுளொடுக்கிய , நின்னையல்லால் **
வருதேவர் மற்றுளரென்று , என்மனத்து இறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே!. 2

§ மற்றுமோர் தெய்வம் உளதென்று , இருப்பாரோடு
உற்றிலேன் * உற்றதும், உன்னடியார்க்கடிமை **
மற்றெல்லம் பேசிலும் , நின்திருவெட்டெழுத்தும்
கற்றுநான் * கண்ணபுரத்துறையம்மானே!. 3

பெண்ணானாள் , பேரிளம் கொங்கையினாரழல்போல் *
உண்ணா நஞ்சுண்டு உகந்தாயை , உகந்தேன் நான் **
மண்ணாளா! வாள்நெடுங்கண்ணி , மதுமலராள்
கண்ணாளா! * கண்ணபுரத்துறையம்மானே!. 4

பெற்றாரும் சுற்றமும் என்று, இவைபேணேன் நான் *
மற்றாரும்பற்றிலேன் , ஆதலால் நின்னடைந்தேன் **
உற்றானென்று உள்ளத்துவைத்து , அருள்செய்கண்டாய் *
கற்றார்சேர் , கண்ணபுரத்துறையம்மானே!. 5

ஏத்திஉன்சேவடி , எண்ணியிருப்பாரை *
பார்த்திருந்து அங்கு , நமன்தமர் பற்றாது **
சோத்தம் நாமஞ்சுதும் என்று , தொடாமை நீ
காத்திபோல் * கண்ணபுரத்துறையம்மானே!. 6

**வெள்ளை நீர் வெள்ளத்து , அணைந்த அரவணைமேல் ***
**துள்ளுநீர் மெள்ளத் , துயின்றபெருமானே! ****
**வள்ளலே! உன்தமர்க்கு என்றும் , நமன்தமர்**
**கள்ளர்போல் * கண்ணபுரத்துறையம்மானே!.** **7**

**மாணாகி , வையமளந்ததுவும் * வாளவுணன்**
**பூணாகம் கீண்டதுவும் , ஈண்டு நினைந்திருந்தேன் ****
**பேணாத வல்வினையேன் , இடரெத்தனையும்**
**காணேன் நான் * கண்ணபுரத்துறையம்மானே!** **8**

**நாட்டினாய் என்னை , உனக்கு முன்தொண்டாக ***
**மாட்டினேன் அத்தனையேகொண்டு , என் வல்வினையை ****
**பாட்டினால் உன்னை , என் நெஞ்சத்து இருந்தமை**
**காட்டினாய் * கண்ணபுரத்துறையம்மானே!.** **9**

**§ கண்டசீர்க் , கண்ணபுரத்துறையம்மானை ***
**கொண்டசீர்த்தொண்டன் , கலியனொலிமாலை ****
**பண்டமாய்ப்பாடும் , அடியவர்க்கு எஞ்ஞான்றும் ***
**அண்டம்போய் ஆட்சி , அவர்க்கு அதறிந்தோமே.** **10**

அடிவரவு: வண்டார் பெரு மற்று பெண் பெற்றார் ஏத்தி வெள்ளை மாண்
நாட்டினாய் கண்டசீர் வங்கம்.

# ஒன்பதாம்பத்து

## வங்கமாமுந்நீர் (9 - 1)

( திருக்கண்ணங்குடி )

§ வங்கமா முந்நீர் வரிநிறப்பெரிய ,
வாளரவினணை மேவி *
சங்கமார் அங்கைத்தடமலருந்திச் ,
சாமமா மேனி என்தலைவன் **
அங்கமாறு ஐந்து வேள்வி நால்வேதம் ,
அருங்கலை பயின்று * எரி மூன்றும்
செங்கையால் வளர்க்கும் துளக்கமில் மனத்தோர் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 1

கவளமாகதத்த கரியுய்யப் , பொய்கைக்கராம்
கொளக்கலங்கி * உள் நினைந்து
துவளமேல் வந்துதோன்றி , வன்முதலை
துணிபடச்சுடுபடை துரந்தோன் **
குவளைநீள் முளரி குமுதம் ஒண்கழுநீர் ,
கொய்ம்மலர் நெய்தல் ஒண்கழனி *
திவளும்மாளிகை சூழ் செழுமணிப்புரிசைத் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 2

வாதை வந்தடர வானமும்நிலனும் ,
மலைகளும் அலைகடல்குளிப்ப *
மீதுகொண்டு உகளும் மீனுருவாகி ,
விரிபுனல் வரிய கட்டொளித்தோன் **
போதலர் புன்னை மல்லிகைமௌவல் ,
புதுவிரை மதுமலர் அணைந்து *
சீதவொண்தென்றல் திசைதொறும் கமழும் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 3

வென்றிசேர் திண்மை விலங்கல் மாமேனி ,
      வெள்ளெயிற்று ஒள்ளெரித்தறுகண் *
பன்றியாய் அன்றுபார்மகள் பயலை
      தீர்த்தவன் , பஞ்சவர்பாகன் **
ஒன்றலாஉருவத்து உலப்பில் பல்காலத்து ,
      உயர்கொடி ஒளிவளர்மதியம் *
சென்றுசேர் சென்னிச்சிகர நன்மாடத் ,
      திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 4

மன்னவன் பெரியவேள்வியில் குறளாய் ,
      மூவடி நீரொடும்கொண்டு *
பின்னும் ஏழுலகும் ஈரடியாகப் ,
      பெருந்திசையடங்கிட நிமிர்ந்தோன் **
அன்னமென்கமலத்தணி மலர்ப்பீடத்து ,
      அலைபுனல் இலைக்குடை நீழல் *
செந்நெலொண்கவரியசைய வீற்றிருக்கும் ,
      திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 5

மழுவினால் அவனியரசை மூவெழுகால் ,
      மணிமுடி பொடிபடுத்து * உதிரக்
குழுவு வார்புனலுள் குளித்து , வெங்கோபம்
      தவிர்ந்தவன், குலைமலிகதலிக் **
குழுவும் வார்கமுகும் குரவும் நற்பலவும்,
      குளிர்தரு சூதமாதவியும் *
செழுமையார் பொழில்கள் தழுவும் நன்மாடத் ,
      திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 6

வானுளாரவரை வலிமையால் நலியும் ,
      மறிகடல் இலங்கையார்கோனை *
பானுநேர்சரத்தால் பனங்கனிபோலப் ,
      பருமுடியுதிர வில்வளைத்தோன் **

கானுலாமயிலின் கணங்கள் நின்றாடக் ,
கணமுகில் முரசம் நின்றதிர *
தேனுலா வரிவண்டு இன்னிசை முரலும் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 7

அரவுநீள்கொடியோன் அவையுள் ஆசனத்தை,
அஞ்சிடாதேயிட * அதற்குப்
பெரியமாமேனி அண்டமூடுருவப் ,
பெருந்திசையடங்கிட நிமிர்ந்தோன் **
வரையின் மாமணியும் மரகதத்திரளும் ,
வயிரமும் வெதிருதிர்முத்தும் *
திரைகொணர்ந்துந்தி வயல்தொறும் குவிக்கும் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 8

பன்னியபாரம் பார்மகட்கு ஒழியப் ,
பாரத மாபெரும் போரில் *
மன்னர்கள்மடிய மணிநெடுந்திண்தேர் ,
மைத்துனற்கு உய்த்தமாமாயன் **
துன்னுமாதவியும் சுரபுனைப்பொழிலும் ,
சூழ்ந்தெழுசெண்பக மலர்வாய் *
தென்னவென்று அளிகள்முரன்றிசைபாடும் ,
திருக்கண்ணங்குடியுள் நின்றானே. 9

§ கலையுலாவல்குல் காரிகை திறத்துக் ,
கடல்பெரும்படையொடும் சென்று *
சிலையினால் இலங்கை தீயெழச்செற்ற,
திருக்கண்ணங்குடியுள் நின்றானை **
மலைகுலாமாட மங்கையர்தலைவன் ,
மானவேல்கலியன் வாயொலிகள் *
உலவுசொல்மாலை ஒன்பதோடொன்றும் ,
வல்லவர்க்கு இல்லை நல்குரவே. 10

அடிவரவு: வங்கம் கவளம் வாதை வென்றி மன்னவன் மழுவினால் வானுளர் அரவு பன்னிய கலை பொன்

# பொன்னிவர்மேனி (9 - 2)

*( திருநாகை )*
*(தலைவனது உருவெளிப்பாடு கண்ட தலைவி தோழிக்குக் கூறிய பாசுரம்)*

§ பொன்னிவர்மேனி மரகதத்தின் ,
பொங்கிளஞ்சோதியகலத்து ஆரம்
மின் * இவர்வாயில் நல்வேதமோதும் ,
வேதியர் வானவராவர்தோழீ **
என்னையும் நோக்கி என்னல்குலும் நோக்கி ,
ஏந்திளங்கொங்கையும் நோக்குகின்றார் *
அன்னையென்னோக்கும் என்றஞ்சுகின்றேன் ,
அச்சோ ஒருவரழகியவா! 1

தோடவிழ் நீலம் மணங்கொடுக்கும் ,
சூழ்புனல் சூழ்குடந்தைக்கிடந்த *
சேடர்கொலென்று தெரிக்கமாட்டேன் ,
செஞ்சுடராழியும் சங்கும் ஏந்தி **
பாடகமெல்லடியார் வணங்கப் ,
பன்மணிமுத்தொடு இலங்குசோதி *
ஆடகம்பூண்டொரு நான்குதோளும் ,
அச்சோ ஒருவரழகியவா!. 2

வேயிருஞ்சோலை விலங்கல்சூழ்ந்த ,
மெய்யமணாளர் இவ்வையமெல்லாம் *
தாயின நாயகராவர் தோழீ! ,
தாமரைக்கண்களிருந்தவாறு **
சேயிருங்குன்றம் திகழ்ந்ததொப்பச் ,
செவ்வியவாகி மலர்ந்தசோதி *
ஆயிரம்தோளொடு இலங்குபூணும் ,
அச்சோ ஒருவரழகியவா!. 3

**வம்பவிழும் துழாய்மாலை தோள்மேல் ,**
**கையன ஆழியும்சங்கும் ஏந்தி ***
**நம்பர்நம் இல்லம் புகுந்துநின்றார் ,**
**நாகரிகர்பெரிதும்இளையர் ****
**செம்பவளம் இவர்வாயின்வண்ணம்,**
**தேவரிவரது உருவம்சொல்லில் ***
**அம்பவளத்திரளேயும் ஒப்பர் ,**
**அச்சோ ஒருவரழகியவா!.** 4

**கோழியும் கூடலும் கோயில் கொண்ட ,**
**கோவலரே ஒப்பர் குன்றமன்ன ***
**பாழியந்தோளும் ஓர் நான்குடையர் ,**
**பண்டு இவர்தம்மையும் கண்டறியோம் ****
**வாழியரோ இவர்வண்ணம் எண்ணில் ,**
**மாகடல் போன்றுளர், கையில்வெய்ய ***
**ஆழியொன்றேந்தி ஓர் சங்குபற்றி,**
**அச்சோ ஒருவரழகியவா!.** 5

**வெஞ்சினவேழம் மருப்பொசித்த,**
**வேந்தர்கொல்? ஏந்திழையார் மனத்தை ***
**தஞ்சுடையாளர்கொல்? யான் அறியேன் ,**
**தாமரைக்கண்கள் இருந்தவாறு ****
**கஞ்சனையஞ்ச முன்கால்விசைத்த ,**
**காளையராவர் கண்டார் வணங்கும் ***
**அஞ்சனமாமலையேயும் ஒப்பர் ,**
**அச்சோ ஒருவரழகியவா!.** 6

**பிணியவிழ் தாமரைமொட்டலர்த்தும் ,**
**பேரருளாளர் கொல்? யானறியேன் ***
**பணியும் என்நெஞ்சமிதென்கொல்? தோழீ! ,**
**பண்டு இவர்தம்மையும் கண்டறியோம் ****

அணிகெழு தாமரையன்ன கண்ணும் ,
அங்கையும் பங்கயம்மேனி வானத்து *
அணிகெழுமாமுகிலேயும் ஒப்பர் ,
அச்சோ ஒருவரழகியவா!. 7

மஞ்சுயர்மாமதி தீண்டநீண்ட ,
மாலிருஞ்சோலை மணாளர்வந்து * என்
நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நின்று நீங்கார் ,
நீர்மலையார்கொல்? நினைக்கமாட்டேன் **
மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்த ,
மாமுகில் போன்றுளர் வந்துகாணீர் *
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறி வந்தார் ,
அச்சோ ஒருவரழகியவா!. 8

எண்திசையும் எறிநீர்க்கடலும் ,
ஏழுலகும் உடனேவிழுங்கி *
மண்டி ஓராலிலைப்பள்ளி கொள்ளும் ,
மாயர்கொல்? மாயம் அறியமாட்டேன் **
கொண்டல் நன்மால்வரையேயும் ஒப்பர் ,
கொங்கலர் தாமரைக்கண்ணும் வாயும் *
அண்டத்தமரர் பணியநின்றார் ,
அச்சோ ஒருவரழகியவா!. 9

§ அன்னமும் கேழலும் மீனுமாய ,
ஆதியை நாகையழகியாரை *
கன்னி நன்மாமதிள்மங்கைவேந்தன் ,
காமருசீர்க்கலிகன்றி ** குன்றா
இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை ,
ஏழுமிரண்டும் ஒரொன்றும்வல்லார் *
மன்னவராயுலகாண்டு , மீண்டும்
வானவராய் மகிழ்வெய்துவரே. 10

அடிவரவு: பொன் தோடு வேய் வம்பு கோழி வெஞ்சினம் பிணி மஞ்சுயர் எண்திசை அன்னம் தன்னை

# தன்னை (9 - 3)

*( திருப்புல்லாணி - 1 )*

*(தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றாமை மிகுதியால் தலைவனிடம் செல்லத் துணிந்து நெஞ்சையும் தோழியையும் துணைவேண்டிய பாசுரம்)*

**§ தன்னை நைவிக்கிலேன் , வல்வினையேன் தொழுதும் எழு ***
**பொன்னை நைவிக்கும் , அப்பூஞ்செருந்தி மணநீழல்வாய் ****
**என்னைநைவித்து , எழில்கொண்டகன்ற பெருமானிடம் ***
**புன்னைமுத்தம்பொழில் சூழ்ந்து , அழகாய புல்லாணியே.** 1

**உருகிநெஞ்சே! நினைந்து இங்கிருந்தென்?, தொழுதும் எழு ***
**முருகுவண்டுண் மலர்க்கைதையின் , நீழலின் முன்னொருநாள் ****
**பெருகுகாதன்மை , என்னுள்ளமெய்தப்பிரிந்தானிடம் ***
**பொருதுமுந்நீர்க்கரைக்கே , மணியுந்து புல்லாணியே.** 2

**ஏதுசெய்தால் மறக்கேன்? , மனமே! தொழுதும் எழு ***
**தாதுமல்கு தடம்சூழ் பொழில் , தாழ்வர்தொடர்ந்து ** பின்**
**பேதை நின்னைப்பிரியேன் இனி , என்று அகன்றானிடம் ***
**போது நாளும்கமழும் , பொழில்சூழ்ந்த புல்லாணியே.** 3

**கொங்குண்வண்டே கரியாகவந்தான் , கொடியேற்கு * முன்**
**நங்களீசன் , நமக்கேபணித்த மொழிசெய்திலன் ****
**மங்கைநல்லாய்! தொழுதும் எழு , போய் அவன் மன்னுமூர் ***
**பொங்கு முந்நீர்க்கரைக்கே , மணியுந்து புல்லாணியே.** 4

**உணரில் உள்ளம்சுடுமால் , வினையேன் தொழுதும் எழு ***
**துணரி ஞாழல் நறும்போது , நம் சூழ்குழல்பெய்து ** பின்**
**தணரில் ஆவிதளருமென , அன்பு தந்தானிடம் ***
**புணரியோதம் பணிலம் , மணியுந்து புல்லாணியே.** 5

**எள்கிநெஞ்சே! நினைந்து இங்கிருந்தென்? , தொழுதும் எழு ***
**வள்ளல்மாயன் மணிவண்ணன் எம்மான் , மருவுமிடம் ****
**கள்ளவிழும் மலர்க்காவியும் , தூமடல் கைதையும் ***
**புள்ளும் அள்ளற்பழனங்களும் சூழ்ந்த , புல்லாணியே.** 6

பரவி நெஞ்சே! தொழுதும் எழு , போய் அவன்பாலமாய் *
இரவும் நாளும் இனிக் , கண்துயிலாதிருந்து என்பயன்? **
விரவிமுத்தம் , நெடுவெண்மணல் மேற்கொண்டு * வெண்திரை
புரவியென்னப்புதம்செய்து , வந்துந்து புல்லாணியே. 7

அலமும் ஆழிப்படையும் உடையார் , நமக்கு அன்பராய் *
சலமதாகித்தகவொன்றிலர் , நாம்தொழுதும் எழு **
உலவுகால் நற்கழியோங்கு , தண்பைம்பொழிலூடு * இசை
புலவுகானல் , களிவண்டினம் பாடுபுல்லாணியே. 8

ஓதி நாமங்குளித்து உச்சிதன்னால் , ஒளி மாமலர் *
பாதம்நாளும் பணிவோம் , நமக்கே நலமாதலின் **
ஆது தாரான்எனிலும்தரும் , அன்றியும் அன்பராய் *
போதும் மாதே! தொழுதும் , அவன் மன்னுபுல்லாணியே. 9

§ இலங்குமுத்தும் பவளக்கொழுந்தும் , ஏழில் தாமரை *
புலங்கள்முற்றும் பொழில்சூழ்ந்து , அழகாயபுல்லாணி மேல் **
கலங்கலில்லாப்புகழான் , கலியனொலிமாலை *
வலங்கொள் தொண்டர்க்கு இடமாவது, பாடில் வைகுந்தமே. 10

அடிவரவு: தன்னை உருகி ஏது கொங்கு உணரில் எள்கி பரவி அலம் ஓதி இலங்கு காவார்.

## *காவார்* (9 - 4)

*(திருப்புல்லாணி- 2)*
*(பிரிவாற்றாத தலைவி பறவைகளைத் தூதுவிட்டும்,*
*பிறை தென்றல் முதலியவற்றால் வருந்தியும் கூறிய பாசுரம்)*

§ காவார் மடல்பெண்ணை , அன்றில் அரிகுரலும் *
ஏவாயினூடு இயங்கும் , எஃகின்கொடிதாலோ **
பூவார்மணம் கமழும் , புல்லாணி கைதொழுதேன் *
பாவாய்! இதுநமக்கு ஓர் , பான்மையேயாகாதே. 1

முன்னம் குறளுருவாய் , மூவடி மண்கொண்டளந்த *
மன்னன் சரிதைக்கே , மாலாகிப்பொன்பயந்தேன் **

பொன்னங்கழிக்கானல் , புள்ளினங்காள்! புல்லாணி *
அன்னமாய் நூல்பயந்தாற்கு , ஆங்கு இதனைச்செப்புமினே. 2

வவ்வித்துழாயதன்மேல் , சென்ற தனிநெஞ்சம் *
செவ்வியறியாது , நிற்குங்கொல்? நித்திலங்கள் **
பவ்வத்திரையுலவு , புல்லாணி கைதொழுதேன் *
தெய்வச்சிலையாற்கு , என்சிந்தைநோய் செப்புமினே. 3

பரிய இரணியனது ஆகம் , அணியுகிரால் *
அரியுருவாய்க்கீண்டான் , அருள்தந்தவா! நமக்கு **
பொருதிரைகள் போந்துலவு , புல்லாணி கைதொழுதேன் *
அரிமலர்க்கண்நீர்ததும்ப , அந்துகிலும் நில்லாவே. 4

வில்லால் இலங்கைமலங்கச் , சரம்துரந்த *
வல்லாளன் பின்போன , நெஞ்சம்வருமளவும் **
எல்லாரும் என்தன்னை , ஏசிலும்பேசிடினும் *
புல்லாணியெம்பெருமான் , பொய்கேட்டிருந்தேனே. 5

சுழன்றிலங்கு வெங்கதிரோன் , தேரோடும் போய்மறைந்தான் *
அழன்றுகொடிதாகி , அஞ்சுடரில் தானடுமால் **
செழுந்தடம் பூஞ்சோலைசூழ் , புல்லாணிகைதொழுதேன் *
இழந்திருந்தேன் என்தன் , எழில்நிறமும் சங்குமே. 6

கனையார் இடிகுரலின் , கார்மணியின் நாவாடல் *
தினையேனும் நில்லாது , தீயிற்கொடிதாலோ **
புனையார்மணிமாடப், புல்லாணி கைதொழுதேன் *
வினையேன் மேல்வேலையும் , வெந்தழலேவீசுமே. 7

தூம்புடைக்கைவேழம் , வெருவமருப்பொசித்த *
பாம்பினணையான் , அருள்தந்தவா! நமக்கு **
பூஞ்செருந்தி பொன்சொரியும் , புல்லாணி கைதொழுதேன் *
தேம்பலிளம்பிறையும் , என்தனக்கு ஓர் வெந்தழலே. 8

வேதமும் வேள்வியும் , விண்ணும் இருசுடரும் *
ஆதியுமானான் , அருள்தந்தவா! நமக்கு **
போதலரும் புன்னைசூழ் , புல்லாணி கைதொழுதேன் *
ஓதமும்நானும் , உறங்காதிருந்தேனே. 9

§ பொன்னலரும் புன்னைசூழ் , புல்லாணியம்மானை *
மின்னிடையார் வேட்கைநோய்கூர , இருந்ததனை **
கல்நவிலும் திண்தோள் , கலியனொலிவல்லார் *
மன்னவராய் மண்ணாண்டு , வானாளு முன்னுவரே. 10

அடிவரவு:: காவார் முன்னம் வவ்வி பரிய வில் சுழன்று கனை தூம்புடை வேதம் பொன்னலரும் தவளம்

## *தவள இளம்பிறை* (9 - 5)

*( திருக்குறுங்குடி - 1 )*

*(தலைவி தனது தலைமகனுள்ளவிடத்தில் கொண்டுவிடும்படி உற்றாரை வேண்டிக்கூறிய பாசுரம்)*

§ தவள இளம்பிறை துள்ளுமுந்நீர்த் ,
தண்மலர்த்தென்றலோடு அன்றிலொன்றித்
துவள * என்னெஞ்சகம்சோர ஈரும் ,
சூழ்பனிநாள் துயிலாதிருப்பேன் **
இவளும் ஓர் பெண்கொடியென்று இரங்கார் ,
என்னலமைந்து முன்கொண்டுபோன *
குவளைமலர்நிற வண்ணர்மன்னு ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 1

தாதவிழ்மல்லிகை புல்லிவந்த ,
தண்மதியினிளவாடை இன்னே *
ஊதை திரிதந்துழறியுண்ண ,
ஓரிரவும் உறங்கேன் ** உறங்கும்
பேதையர் பேதைமையால் இருந்து ,
பேசிலும் பேசுக பெய்வளையார் *
கோதை நறுமலர்மங்கைமார்வன் ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 2

காலையும் மாலையொத்துண்டு , கங்குல்
நாழிகை ஊழியில் நீண்டுலாவும் *
போல்வதோர் தன்மை புகுந்துநிற்கும் ,
பொங்கழலேயொக்கும் வாடைசொல்லில் **
மாலவன் மாமணிவண்ணன்மாயம் ,
மற்றுமுள அவை வந்திடாமுன் *
கோலமயில் பயிலும்புறவின் ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 3

கருமணிபூண்டு வெண்ணாகணைந்து ,
காரிமிலேற்றணர் தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசை என்னுள்ளம்தள்ள ,
ஓரிரவும் உறங்காதிருப்பேன் **
பெருமணிவானவர் உச்சிவைத்த ,
பேரருளாளன் பெருமைபேசி *
குருமணிநீர் கொழிக்கும்புறவின்,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 4

திண்திமிலேற்றின் மணியும், ஆயன்
தீங்குழலோசையும் தென்றலோடு *
கொண்டதோர் மாலையும் அந்தியீன்ற ,
கோல இளம்பிறையோடுகூடி **
பண்டையவல்ல இவைநமக்குப் ,
பாவியேனாவியை வாட்டன்செய்யும் *
கொண்டல்மணிநிற வண்ணர்மன்னு ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 5

எல்லியும்நன்பகலும் இருந்தே ,
ஏசிலும்ஏசுக ஏந்திழையார் *
நல்லரவர் திறம் நாமறியோம் ,
நாண்மடம் அச்சம் நமக்கிங்கில்லை**

வல்லனசொல்லி மகிழ்வரேலும் ,
மாமணிவண்ணரை நாம்மறவோம் *
கொல்லைவளரிள முல்லைபுல்கு ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 6

செங்கண் நெடியகரியமேனித் ,
தேவரொருவர் இங்கேபுகுந்து * என்
அங்கம்மெலிய வளைகழல ,
ஆது கொலோ? என்று சொன்னபின்னை **
ஐங்கணை வில்லி தன்னாண்மை ,
என்னோடாடுமதனை அறியமாட்டேன் *
கொங்கலர் தண்பணை சூழ்புறவில் ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 7

கேவலமன்று கடலினோசை , கேண்மின்கள்
ஆயன்கை ஆம்பல்வந்து * என்
ஆவியளவும் அணைந்து நிற்கும் ,
அன்றியும் ஐந்துகணை தெரிந்திட்டு **
ஏவலம்காட்டி இவனொருவன் ,
இப்படியேபுகுந்து எய்திடாமுன் *
கோவலர்கூத்தன் குறிப்பறிந்து ,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 8

சோத்தெனநின்று தொழஇரங்கான் ,
தொன்னலங்கொண்டெனக்கு இன்றுகாறும் *
போர்ப்பதோர் பொற்படம் தந்துபோனான்,
போயின ஊரறியேன் ** என் கொங்கை
மூத்திடுகின்றன , மற்றவன்தன்
மொய்யகலம் அணையாதுவாளா *
கூத்தன் இமையவர்கோன் விரும்பும்,
குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின். 9

§ செற்றவன் தென்னிலங்கைமலங்கத் ,
தேவர்பிரான் திருமாமகளைப்
பெற்றும் * என்னெஞ்சகம் கோயில்கொண்ட ,
பேரருளாளன் பெருமைபேசக்
கற்றவன் ** காமருசீர்க்கலியன் ,
கண்ணகத்தும் மனத்தும் அகலாக்
கொற்றவன் *முற்றுலகாளி நின்ற ,
குறுங்குடிக்கே என்னைஉய்த்திடுமின். 10

அடிவரவு:: தவளம் தாதவிழ் காலை கருமணி திண்திமில் எல்லி செங்கண் கேவலம் சோத்தென செற்றவன் அக்கு

## அக்கும்புலியினதளும் (9 - 6)

*( திருக்குறுங்குடி - 2 )*

§ அக்கும்புலியின், அதளும் உடையார் * அவரொருவர்
பக்கம்நிற்க நின்ற , பண்பரூர் போலும் **
தக்கமரத்தின், தாழ்சினையேறி * தாய்வாயில்
கொக்கின்பிள்ளை , வெள்ளிறவுண்ணும்குறுங்குடியே. 1

துங்காரரவத்திரை வந்துலவத் , தொடுகடலுள் *
பொங்காரரவில் துயிலும் , புனிதரூர் போலும் **
செங்காலன்னம் , திகழ்தண்பணையில் பெடையோடும் *
கொங்கார்கமலத்து, அலரில்சேரும் குறுங்குடியே. 2

வாழக்கண்டோம், வந்துகாண்மின் தொண்டீர்காள்! *
கேழல்செங்கண் , மாமுகில்வண்ணர் மருவுமூர் **
ஏழைச்செங்கால் , இன்துணைநாரைக்கு இரைதேடி *
கூழைப்பார்வைக் , கார்வயல்மேயும் குறுங்குடியே. 3

சிரமுனைந்தும் ஐந்தும் , சிந்தச்சென்று * அரக்கன்
உரமும்கரமும் துணித்த, உரவோனூர் போலும் **
இரவும்பகலும் , ஈன்தேன் முரல * மன்றெல்லாம்
குரவின் பூவேதான் , மணநாறும் குறுங்குடியே. 4

கவ்வைக்களிற்று மன்னர்மாளக் , கலிமான் தேர்
ஐவர்க்காய் * அன்று அமரில் , உய்த்தான் ஊர்போலும் **
மைவைத்திலங்கு கண்ணார் தங்கள் , மொழியொப்பான் *
கொவ்வைக்கனிவாய்க் , கிள்ளைபேசும் குறுங்குடியே. 5

தீநீர்வண்ண, மாமலர்கொண்டு விரையேந்தி *
தூநீர்பரவித், தொழுமின் எழுமின் தொண்டீர்காள்! **
மாநீர் வண்ணர், மருவியுறையுமிடம் * வானில்
கூனீர்மதியை , மாடம்தீண்டும் குறுங்குடியே. 6

வல்லிச்சிறு நுண்ணிடையாரிடை , நீர் வைக்கின்ற *
அல்லல் சிந்தை தவிர , அடைமின் அடியீர்காள் **
சொல்லில் திருவேயனையார் , கனிவாய் எயிறொப்பான் *
கொல்லைமுல்லை , மெல்லரும்பீனும் குறுங்குடியே. 7

நாராரிண்டை , நாண்மலர்கொண்டு நந்தமர்காள் *
ஆராஅன்போடு , எம்பெருமானூர் அடைமின்கள் **
தாராவாரும் , வார்புனல் மேய்ந்து வயல்வாழும் *
கூர்வாய்நாரை , பேடையொடாடும் குறுங்குடியே. 8

நின்றவினையும் துயரும்கெட , மாமலர் ஏந்தி *
சென்று பணிமின் எழுமின் , தொழுமின் தொண்டீர்காள் **
என்றும் இரவும்பகலும் , வரிவண்டு இசைபாட *
குன்றின் முல்லை , மன்றிடைநாறும் குறுங்குடியே. 9

§ சிலையால் இலங்கை செற்றான் , மற்றோர் சினவேழம் *
கொலையார் கொம்புகொண்டான் மேய, குறுங்குடிமேல் **
கலையார் பனுவல்வல்லான் , கலியனொலிமாலை *
நிலையார் பாடல்பாடப் , பாவம் நில்லாவே. 10

அடிவரவு:: அக்கு துங்கார் வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலையால் தந்தை

# தந்தை தாய் (9 - 7)

*( திருவல்லவாழ் )*

§தந்தைதாய் மக்களே , சுற்றமென்று உற்றுவர் பற்றி நின்ற *
பந்தமார் வாழ்க்கையை, நொந்து நீ பழியெனக் கருதினாயேல் **
அந்தமாய் ஆதியாய் , ஆதிக்குமாதியாய் ஆயனாய *
மைந்தனார் வல்லவாழ், சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே!. 1

மின்னுமாவல்லியும் வஞ்சியும்வென்ற, நுண்ணிடை நுடங்கும் *
அன்னமென்னடையினார் கலவியை, அருவருத்து அஞ்சினாயேல் **
துன்னுமாமணி முடிப்பஞ்சவர்க்காகி, முன் தூது சென்ற *
மன்னனார் வல்லவாழ், சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே!. 2

பூணுலா மென்முலைப் பாவைமார், பொய்யினை மெய்யிதென்று *
பேணுவார் பேசுமப்பேச்சை, நீ பிழையெனக் கருதினாயேல் **
நீணிலா வெண்குடைவாணனார், வேள்வியில் மண்ணிரந்த *
மாணியார்வல்லவாழ், சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே!. 3

பண்ணுலா மென்மொழிப்பாவைமார், பணைமுலையணைதும் நாமென்று*
எண்ணுவாரெண்ணம் அதொழித்து , நீ பிழைத்துயக் கருதினாயேல்*
விண்ணுளார் விண்ணின் மீதியன்ற, வேங்கடத்துளார் * வளங்கொள் முந்நீர்
வண்ணனார் வல்லவாழ், சொல்லுமா வல்லையாய் மருவுநெஞ்சே! 4

மஞ்சுதோய் வெண்குடை மன்னராய், வாரணம் சூழவாழ்ந்தார் *
துஞ்சினாரென்பதோர் சொல்லை, நீ துயரெனக்கருதினாயேல் **
நஞ்சுதோய் கொங்கைமேல் அங்கைவாய்வைத்து, அவள் நாளையுண்ட *
மைந்தனார் வல்லவாழ் , சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே! 5

உருவினார் பிறவிசேர், ஊன்பொதி நரம்புதோல் குரம்பையுள் புக்கு *
அருவிநோய் செய்துநின்று ஐவர்தாம், வாழ்வதற்கு அஞ்சினாயேல் **
திருவினார் வேதம்நான்கு ஐந்து தீ, வேள்வியோடு அங்கமாறும் *
மருவினார் வல்லவாழ், சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே! 6

நோயெலாம் பெய்ததோராக்கையை, மெய்யெனக்கொண்டு * வாளா
பேயர்தாம் பேசுமப்பேச்சை, நீபிழையெனக் கருதினாயேல் *
தீயுலா வெங்கதிர்த்திங்களாய், மங்குல் வானாகிநின்ற *
மாயனார்வல்லவாழ், சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே!. 7

மஞ்சுசேர் வானெரி, நீர்நிலம் காலிவை மயங்கி நின்ற *
அஞ்சுசேராக்கையை, அரணமன்றென்றுயக் கருதினாயேல் **
சந்துசேர் மென்முலைப், பொன்மலர்ப்பாவையும் தாமும் * நாளும்
வந்துசேர் வல்லவாழ், சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே!. 8

வெள்ளியார் பிண்டியார் , போதியார் என்றிவர் ஓதுகின்ற *
கள்ள நூல் தன்னையும், கருமமன்று என்றுயக்கருதினாயேல் **
தெள்ளியார் கைதொழும் தேவனார், மாமுநீர் அமுதுதந்த *
வள்ளலார் வல்லவாழ், சொல்லுமாவல்லையாய் மருவு நெஞ்சே!. 9

§ மறைவலார் குறைவிலார் உறையுமூர், வல்லவாழடிகள் தம்மை *
சிறைகுலா வண்டறை சோலைசூழ், கோலநீளாலி நாடன் **
கறையுலா வேல்வல்ல, கலியன் வாயொலியிவை கற்றுவல்லார் *
இறைவராய் இருநிலம் காவல்பூண்டு, இன்பம் நன்கெய்துவாரே. 10

அடிவரவு:: தந்தை மின்னும் பூண் பண் மஞ்சுதோய் உருவின் நோய் மஞ்சுசேர் வெள்ளியார் மறை முந்துற.

## *முந்துற* (9 - 8)

*(திருமாலிருஞ்சோலை - 1)*

§ முந்துறஉரைக்கேன் விரைக்குழல் மடவார் ,
கலவியை விடுதடுமாறல் *
அந்தரமேழும் அலைகடலேழும் ஆய ,
எம்மடிகள் தம்கோயில் **
சந்தொடுமணியும் அணிமயில் தழையும் ,
தழுவி வந்து அருவிகள் நிரந்து *
வந்திழிசாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மட நெஞ்சே!. 1961

இண்டையும்புனலும் கொண்டிடையின்றி ,
எழுமினோ தொழுதுமென்று * இமையோர்
அண்டரும்பரவ அரவணைத்துயின்ற ,
சுடர்முடிக்கடவுள் தம்கோயில் **
விண்டலர்தூளி வேய்வளர்புறவில் ,
விரைமலர்க்குறிஞ்சியின் நறுந்தேன் *
வண்டமர்சாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 2

பிணிவளராக்கை நீங்கநின்றேத்தப் ,
பெருநிலமருளின் முன்னருளி *
அணிவளர்குறளாய் அகலிடமுழுதும் ,
அளந்த எம்மடிகள் தம்கோயில் **
கணிவளர்வேங்கை நெடுநிலமதனில் ,
குறவர்தம் கவணிடைத்துரந்த *
மணிவளர்சாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 3

சூர்மயிலாய பேய்முலை சுவைத்துச் ,
சுடுசரம் அடுசிலைத்துரந்து *
நீர்மையிலாத தாடகைமாள ,
நினைந்தவர் மனம்கொண்ட கோயில் **
கார்மலிவேங்கை கோங்கலர்புறவில் ,
கடிமலர்க்குறிஞ்சியின் நறுந்தேன் *
வார்புனல்சூழ் தண்மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 4

வணங்கலிலரக்கன் செருக்களத்தவிய ,
மணிமுடி ஒருபதும்புரள *
அணங்கெழுந்தவன் தன்கவந்தம் நின்றாட,
அமர்செய்த அடிகள்தம் கோயில் **

பிணங்கலில் நெடுவேய் நுதிமுகம் கிழிப்பப் ,
பிரசம் வந்திழிதர * பெருந்தேன்
மணங்கமழ் சாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 5

விடங்கலந்தமர்ந்த அரவணைத்துயின்று ,
விளங்கனிக்கு இளங்கன்றுவிசிறி *
குடங்கலந்தாடிக்குரவை முன்கோத்த ,
கூத்த எம்மடிகள்தம் கோயில் **
தடங்கடல் முகந்து விசும்பிடைப்பிளிறத் ,
தடவரைக்களிறென்று முனிந்து *
மடங்கல் நின்றதிரும் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 6

தேனுகனாவி போயுக அங்கு ஓர் ,
செழுந்திரள் பனங்கனியுதிர *
தானுகந்தெறிந்த தடங்கடல்வண்ணர்,
எண்ணிமுன் இடங்கொண்டகோயில் **
வானகச்சோலை மரகதச்சாயல் ,
மாமணிக்கல்லதர் நிறைந்து *
மானுகர்சாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 7

புதமிகு விசும்பில் புணரிசென்றணவப் ,
பொருகடல் அரவணைத்துயின்று *
பதமிகுபரியின் மிகுசினம்தவிர்த்த ,
பனிமுகில்வண்ணர்தம் கோயில் **
கதமிகுசினத்த கடதடக்களிற்றின்,
கவுள்வழிக் களிவண்டுபருக *
மதமிகுசாரல் மாலிருஞ்சோலை ,
வணங்குதும்வா மடநெஞ்சே!. 8

புந்தியில்சமணர் புத்தரென்றிவர்கள் ,
    ஒத்தனபேசவும் உகந்திட்டு *
எந்தைபெம்மானார் இமையவர்தலைவர் ,
    எண்ணிமுன் இடங்கொண்டகோயில் **
சந்தனப்பொழிலின் தாழ்சினை நீழல் ,
    தாழ்வரை மகளிர்கள் நாளும் *
மந்திரத்திறைஞ்சும் மாலிருஞ்சோலை ,
    வணங்குதும்வா மடநெஞ்சே!. 9

§ வண்டமர்சாரல் மாலிருஞ்சோலை ,
    மாமணிவண்ணரை வணங்கும் *
தொண்டரைப்பரவும் சுடரொளிநெடுவேல் ,
    சூழ்வயலாலி நன்னாடன் **
கண்டல் நல்வேலி மங்கையர்தலைவன் ,
    கலியன்வாயொலி செய்தபனுவல் *
கொண்டு இவைபாடும் தவமுடையார்கள் ,
    ஆள்வர் இக்குரைகடலுலகே. 10

அடிவரவு: முந்துற இண்டை பிணி சூர்மையில் வணங்கலில் விடம் தேனுகன் புதமிகு புந்தி வண்டமர் மூவர்

## *மூவரில்* (9 - 9)

*( திருமாலிருஞ்சோலை - 2 )*

*தலைவியின் நிலையைக் குறித்துத் தாய் இரங்கிக் கூறிய பாசுரம்.*

§ மூவரில் முன் முதல்வன் , முழங்கார்கடலுள் கிடந்து *
பூவலருந்தி தன்னுள், புவனம்படைத்துண்டுமிழ்ந்த **
தேவர்கள் நாயகனைத், திருமாலிருஞ்சோலை நின்ற *
கோவலர் கோவிந்தனைக் , கொடியேரிடை கூடுங்கொலோ?. 1

§ புனைவளர் பூம்பொழிலார் , பொன்னி சூழரங்கநகருள்
முனைவனை * மூவுலகும் படைத்த , முதல் மூர்த்திதன்னை **
சினைவளர் பூம்பொழில்சூழ் , திருமாலிருஞ்சோலைநின்றான் *
கனைகழல் காணுங்கொலோ? , கயற்கண்ணி எம் காரிகையே!. 199 2

உண்டு உலகேழினையும் , ஒரு பாலகன் ஆலிலைமேல் *
கண்துயில் கொண்டுகந்த , கருமாணிக்க மாமலையை **
திண்திறல் மாகரிசேர், திருமாலிருஞ்சோலை நின்ற *
அண்டர்தம்கோவினை, இன்று அணுகுங்கொல்? என்னாயிழையே! 3

சிங்கமதாய் அவுணண், திறலாகம் முன்கீண்டுகந்த *
பங்கய மாமலர்க்கண் , பரனை எம்பரஞ்சுடரை **
திங்கள் நன்மாமுகில்சேர் , திருமாலிருஞ்சோலை நின்ற *
நங்கள் பிரானை, இன்று நணுகுங்கொல் ? என்நன்னுதலே!. 4

தானவன் வேள்விதன்னில் , தனியேகுறளாய் நிமிர்ந்து *
வானமும் மண்ணகமும், அளந்த திரிவிக்கிரமன் **
தேனமர்பூம்பொழில்சூழ், திருமாலிருஞ்சோலை நின்ற *
வானவர்கோனை, இன்று வணங்கித்தொழவல்லள் கொலோ!. 5

§ நேசமிலாதவர்க்கும் , நினையாதவர்க்கும் அரியான் *
வாசமலர்ப்பொழில்சூழ், வடமாமதுரைப் பிறந்தான் **
தேசமெல்லாம் வணங்கும் ,திருமாலிருஞ்சோலை நின்ற *
கேசவ நம்பிதன்னைக் , கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ! 6

புள்ளினை வாய்பிளந்து, பொருமாகரி கொம்பொசித்து *
கள்ளச்சகடுதைத்த ,கருமாணிக்க மாமலையை **
தெள்ளருவி கொழிக்கும், திருமாலிருஞ்சோலை நின்ற *
வள்ளலை வாணுதலாள் , வணங்கித்தொழவல்லள் கொலோ!. 7

பார்த்தனுக்கு அன்றருளிப், பாரதத்தொருதேர் முன் நின்று *
காத்தவன் தன்னை, விண்ணோர் கருமாணிக்கமாமலையை **
தீர்த்தனைப்பூம்பொழில் சூழ், திருமாலிருஞ்சோலை நின்ற *
மூர்த்தியைக்கைதொழவும் , முடியுங்கொல் என்மொய்குழற்கே!. 8

§ வலம்புரிஆழியனை , வரையார் திரள்தோளன்தன்னை *
புலம்புரி நூலவனைப் , பொழில்வேங்கட வேதியனை **

சிலம்பியலாறுடைய, திருமாலிருஞ்சோலை நின்ற *
நலந்திகழ் நாரணனை , நணுகுங்கொல்? என் நன்னுதலே!. 9

§ தேடற்கரியவனைத் , திருமாலிருஞ்சோலை நின்ற *
ஆடல் பறவையனை , அணியாயிழை காணுமென்று **
மாடக்கொடி மதிள்சூழ் , மங்கையார் கலிகன்றி சொன்ன *
பாடல்பனுவல் பத்தும் , பயில்வார்க்கில்லை பாவங்களே!. 10

அடிவரவு: மூவரில் புனை உண்டு சிங்கமது தானவன் நேசம் புள்வினை பார்த்தனுக்கு வலம்புரி தேடற்கு எங்கள்

## *எங்கள்* (9 - 10)

*( திருக்கோட்டியூர் )*

§ எங்கள் எம்மிறைஎம்பிரான் ,
இமையோர்க்கு நாயகன் * ஏத்தடியவர்
தங்கள் தம்மனத்துப் ,
பிரியாது அருள்புரிவான் **
பொங்கு தண்ணருவி புதம் செய்யப் ,
பொன்களேசிதறும் இலங்கொளி *
செங்கமலம் மலரும்,
திருக்கோட்டியூரானே. 1

எவ்வநோய் தவிர்ப்பான், எமக்கிறை
இன்னகைத்துவர்வாய் * நிலமகள்
செவ்விதோயவல்லான் ,
திருமாமகட்கு இனியான் **
மௌவல்மாலை வண்டாடும், மல்லிகை
மாலையோடு மணந்து * மாருதம்
தெய்வநாறவரும்
திருக்கோட்டியூரானே. 2

வெள்ளியான் கரியான் , மணிநிறவண்ணன்
விண்ணவர் தமக்கிறை * எமக்கு
ஒள்ளியான் உயர்ந்தான் ,
உலகேழும் உண்டுமிழ்ந்தான் **
துள்ளுநீர் மொண்டுகொண்டு சாமரைக்கற்றைச்,
சந்தனமுந்தி வந்தசை *
தெள்ளுநீர்ப்புறவில் ,
திருக்கோட்டியூரானே. 3

ஏறுமேறி இலங்குமொண் மழுப்பற்றும் ,
ஈசற்குஇசைந்து * உடம்பிலோர்
கூறுதான் கொடுத்தான்,
குலமாமகட்கு இனியான் **
நாறு சண்பகமல்லிகைமலர்புல்கி ,
இன்னிள வண்டு * நல்நறும்
தேறல்வாய் மடுக்கும் ,
திருக்கோட்டியூரானே. 4

வங்கமாகடல் வண்ணன் ,
மாமணிவண்ணன் விண்ணவர்கோன் * மதுமலர்த்
தொங்கல் நீள்முடியான் ,
நெடியான் படிகடந்தான் **
மங்குல்தோய் மணிமாட வெண்கொடி ,
மாகமீதுயர்ந்தேறி * வானுயர்
திங்கள் தானணவும்
திருக்கோட்டியூரானே. 5

காவலன் இலங்கைக்கிறைகலங்கச் ,
சரம்செலவுய்த்து * மற்றவன்
ஏவலம் தவிர்த்தான் ,
என்னையாளுடை எம்பிரான் **

நாவலம் புவிமன்னர் வந்துவணங்க,
மாலுறைகின்றது இங்கென *
தேவர் வந்திறைஞ்சும்,
திருக்கோட்டியூரானே. 6

கன்றுகொண்டு விளங்கனியெறிந்து ,
ஆநிரைக்கு அழிவென்று * மாமழை
நின்று காத்துகந்தான் ,
நிலமாமகட்கு இனியான் **
குன்றின் முல்லையின் வாசமும் ,குளிர்மல்லிகை
மணமும் அளைந்து * இளந்
தென்றல் வந்துலவும் ,
திருக்கோட்டியூரானே. 7

பூங்குருந்தொசித்து ஆனைகாய்ந்து ,
அரிமாச்செகுத்து * அடியேனையாளுகந்து
ஈங்கு என்னுள்புகுந்தான் ,
இமையோர்கள் தம்பெருமான் **
தூங்கு தண்பலவின் கனி ,
தொகுவாழையின் கனியொடு மாங்கனி *
தேங்கு தண்புனல்சூழ் ,
திருக்கோட்டியூரானே. 8

கோவையின் தமிழ்பாடுவார் ,
குடமாடுவார் தடமாமலர்மிசை *
மேவு நான்முகனில் ,
விளங்கு புரிநூலர் **
மேவு நான்மறைவாணர் ஐவகைவேள்வி ,
ஆறங்கம் வல்லவர்தொழும் *
தேவதேவ பிரான் ,
திருக்கோட்டியூரானே. 9

§ ஆலுமாவலவன் கலிகன்றி ,
மங்கையர் தலைவன் * அணிபொழில்
சேல்கள் பாய்கழனித் ,
திருக்கோட்டியூரானை **
நீலமாமுகில்வண்ணனை நெடுமாலை ,
இன்தமிழால் நினைந்த * இந்
நாலுமாறும் வல்லார்க்கு
இடமாகும் வானுலகே. 10

அடிவரவு: எங்கள் எவ்வம் வெள்ளியான் ஏறு வங்கம் காவலன் கன்று பூங்குருந்து கோவை ஆலும் ஒருநல்

## பத்தாம் பத்து

### ஒருநல் சுற்றம் (10 - 1)

*( பல திவ்யதேசங்கள் )*

§ ஒருநல்சுற்றம் , எனக்குயிர் ஒண்பொருள் *
வருநல்தொல்கதி , ஆகியமைந்தனை **
நெருநல்கண்டது , நீர்மலை இன்றுபோய் *
கருநெல்சூழ் , கண்ணமங்கையுள் காண்டுமே. 1

§ பொன்னைமாமணியை , அணியார்ந்ததோர்
மின்னை * வேங்கடத்து உச்சியில், கண்டுபோய் **
என்னையாளுடை ஈசனை, எம்பிரான்
தன்னை * யாம்சென்றுகாண்டும் , தண்காவிலே. 2

வேலையாலிலைப் , பள்ளிவிரும்பிய *
பாலையாரமுதத்தினைப், பைந்துழாய் **
மாலைஆலியில், கண்டுமகிழ்ந்துபோய் *
ஞாலமுன்னியைக்காண்டும், நாங்கூரிலே. 3

துளக்கமில்சுடரை * அவுணனுடல்
பிளக்கும்மைந்தனைப் , பேரில் வணங்கிப்போய் **

அளப்பிலாரமுதை, அமரர்க்கருள்
விளக்கினை * சென்று, வெள்ளறைக்காண்டுமே. 4

சுடலையில், சுடுநீறன்அமர்ந்தது ஓர் *
நடலைதீர்த்தவனை, நறையூர்கண்டு ** என்
உடலையுள் புகுந்து , உள்ளம்உருக்கியுண்*
விடலையைச்சென்று காண்டும், மெய்யத்துள்ளே. 5

வானைஆரமுதம், தந்தவள்ளலை *
தேனைநீள்வயல், சேறையில் கண்டுபோய் **
ஆனை வாட்டியருளும் , அமரர்தம்
கோனை * யாம்குடந்தைச், சென்றுகாண்டுமே. 6

கூந்தலார்மகிழ், கோவலனாய் * வெண்ணெய்
மாந்தழுந்தையில், கண்டுமகிழ்ந்துபோய் **
பாந்தள்பாழியில், பள்ளிவிரும்பிய *
வேந்தனைச்சென்று காண்டும், வெஃகாவுளே. 7

பத்தராவியைப் , பால்மதியை * அணித்
தொத்தை, மாலிருஞ்சோலைத்தொழுதுபோய் **
முத்தினைமணியை, மணிமாணிக்க
வித்தினை * சென்று , விண்ணகர்க் காண்டுமே. 8

கம்பமாகளிறு , அஞ்சிக்கலங்க * ஓர்
கொம்புகொண்ட, குரைகழல்கூத்தனை **
கொம்புலாம்பொழில், கோட்டியூர்க்கண்டுபோய் *
நம்பனைச்சென்று காண்டும், நாவாயுளே. 9

§ பெற்றமாளியை , பேரில்மணாளனை *
கற்றநூல், கலிகன்றியுரைசெய்த **
சொல்திறமிவை, சொல்லியதொண்டர்கட்கு *
அற்றமில்லை, அண்டம்அவர்க்கு ஆட்சியே. 10

அடிவரவு: ஒரு பொன்னை வேலை துளக்கம் கடலையில் வானை கூந்தல் பத்தர் கம்பம் பெற்றம் இரக்கம்.

# இரக்கமின்றி (10 - 2)

*(இராமாவதாரத்தில் ஈடுபாடு - 1)*

*(இராமனிடம் தோல்வியுற்ற அரக்கர் அபயம் வேண்டிக் கூத்தாடுதல்)*

§ இரக்கமின்றி எங்கோன்செய்த தீமை ,
இம்மையே எமக்கெய்திற்றுக் காணீர் *
பரக்க யாமின்றுரைத்து என்? இராவணன்
பட்டனன் , இனியாவர்க்கு உரைக்கோம் ? **
குரக்கு நாயகர்காள்! இளங்கோவே ,
கோலவல்வில் இராமபிரானே! *
அரக்கராடழைப்பார்இல்லை , நாங்கள்
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 1

பத்து நீள்முடியும் அவற்றிரட்டிப் ,
பாழித்தோளும் படைத்தவன்செல்வம் *
சித்தம் மங்கையர்பால் வைத்துக்கெட்டான் ,
செய்வதொன்று அறியா அடியோங்கள் **
ஒத்ததோளிரண்டும் ஒருமுடியும் ,
ஒருவர்தம் திறத்தோமன்றி வாழ்ந்தோம் *
அத்த! எம்பெருமான்! எம்மைக்கொல்லேல் ,
அஞ்சினோம் தடம்பொங்கத்தம் பொங்கோ. 2

தண்டகாரணியம்புகுந்து , அன்று
தையலைத்தகவிலி எங்கோமான் *
கொண்டுபோந்துகெட்டான் எமக்கு இங்குஓர்
குற்றமில்லை , கொல்லேல் குலவேந்தே **
பெண்டிரால்கெடும் இக்குடி தன்னைப் ,
பேசுகின்றதென்? தாசரதீ! * உன்
அண்டவாணர் உகப்பதேசெய்தாய் ,
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 3

எஞ்சலில் இலங்கைக்கிறை, எங்கோன்
தன்னை முன்பணிந்து * எங்கள் கண்முகப்பே
நஞ்சுதான் அரக்கர் குடிக்கென்று ,
நங்கையை அவன்தம்பியே சொன்னான் **
விஞ்சை வானவர் வேண்டிற்றேபட்டோம் ,
வேரிவார்பொழில் மாமயிலன்ன *
அஞ்சலோதியைக் கொண்டுநடமின் ,
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 4

செம்பொன்நீள்முடி எங்களிராவணன் ,
சீதையென்பதோர் தெய்வம்கொணர்ந்து *
வம்புலாம்கடிகாவில் சிறையா
வைத்ததே , குற்றமாயிற்றுக்காணீர் **
கும்பனோடு நிகும்பனும்பட்டான் ,
கூற்றம் மானிடமாய் வந்துதோன்றி *
அம்பினால் எம்மைக்கொன்றிடுகின்றது ,
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 5

ஓதமா கடலைக்கடந்தேறி ,
உயர்கொள் மாக்கடிகாவையிறுத்து *
காதல்மக்களும் சுற்றமும்கொன்று ,
கடியிலங்கை மலங்க எரித்து **
தூதுவந்தகுரங்குக்கே , உங்கள்
தோன்றல்தேவியை விட்டுக்கொடாதே *
ஆதர்நின்றுபடுகின்றது அந்தோ! ,
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 6

தாழமின்றி முந்நீரை அஞ்ஞான்று ,
தகைந்ததேகண்டு வஞ்சிநுண்மருங்குல் *
மாழைமான் மடநோக்கியைவிட்டு ,
வாழகில்லா மதியில்மனத்தானை **

ஏழையைஇலங்கைக்கிறை தன்னை ,
எங்களையொழியக்கொலை அவனை *
சூழுமாநினை மாமணிவண்ணா! ,
சொல்லினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 7

மனங்கொண்டேறும் மண்டோதரி முதலா ,
அங்கயற்கண்ணினார்கள் இருப்ப *
தனங்கொள்மென்முலை நோக்கம் ஒழிந்து ,
தஞ்சமே சில தாபதரென்று **
புனங்கொள் மென்மயிலைச்சிறை வைத்த ,
புன்மையாளன் நெஞ்சில்புகவெய்த *
அனங்கனன்ன திண்தோள் எம்மிராமற்கு ,
அஞ்சினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 8

புரங்கள்மூன்றும் ஓர்மாத்திரைப்போதில் ,
பொங்கெரிக்கு இரைகண்டவன்அம்பின் *
சரங்களேகொடிதாய் அடுகின்ற ,
சாம்பவான் உடன்நிற்கத்தொழுதோம் **
இரங்கு நீஎமக்கு எந்தைபிரானே! ,
இலங்கு வெங்கதிரோன் சிறுவா! *
குரங்குகட்கரசே! எம்மைக்கொல்லேல்! ,
கூறினோம் தடம் பொங்கத்தம்பொங்கோ. 9

§ அங்குஅவ்வானவர்க்கு ஆகுலம் தீர ,
அணியிலங்கை அழித்தவன்தன்னை *
பொங்குமாவலவன் கலிகன்றி ,
புகன்ற பொங்கத்தம்கொண்டு ** இவ்வுலகில்
எங்கும்பாடி நின்று ஆடுமின் தொண்டீர்! ,
இம்மையே இடரில்லை * இறந்தால்
தங்குமூர் அண்டமே கண்டுகொண்மின் ,
சாற்றினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ! 10

அடிவரவு: இரக்கம் பத்து தண்டக ஏஞ்சல் செம்பொன் ஓதம் தாழம் மனம் புரங்கள் அங்கு ஏத்து.

# ஏத்துகின்றோம் (10 - 3)

*( இராமாவதாரத்தில் ஈடுபாடு:: இதுவுமது - 2 )*

§ ஏத்துகின்றோம் நாத்தழும்ப, இராமன் திருநாமம் *
சோத்தநம்பீ! சுக்கிரீவா!, உம்மைத்தொழுகின்றோம்**
வார்த்தைபேசீர் எம்மை, உங்கள்வானரம் கொல்லாமே*
கூத்தர்போல ஆடுகின்றோம், குழமணிதூரமே. 1

எம்பிரானே! என்னையாள்வாய்!, என்றென்று அலற்றாதே *
அம்பின்வாய்ப்பட்டு ஆற்றகில்லாது, இந்திரசித்தழிந்தான் **
நம்பிஅநுமா! சுக்கிரீவா!, அங்கதனே! நளனே! *
கும்பகர்ணன் பட்டுப்போனான், குழமணிதூரமே. 2

ஞாலமாளும் உங்கள்கோமான், எங்கள்இராவணற்கு *
காலனாகிவந்தவா!, கண்டஞ்சிக்கருமுகில்போல் **
நீலன்வாழ்க சுடேணன் வாழ்க, அங்கதன் வாழ்கவென்று *
கோலமாகஆடுகின்றோம், குழமணிதூரமே. 3

மணங்கள்நாறும் வார்குழலார், மாதர்களாதரத்தை *
புணர்ந்த சிந்தைப்புன்மையாளன், பொன்ற வரிசிலையால் **
கணங்களுண்ண வாளியாண்ட, காவலனுக்கிளையோன்*
குணங்கள்பாடி ஆடுகின்றோம், குழமணிதூரமே. 4

வென்றிதந்தோம் மானம்வேண்டோம், தானம்எமக்காக *
இன்றுதம்மின் எங்கள்வாணாள், எம்பெருமான்தமர்காள் **
நின்றுகாணீர் கண்களார, நீர் எம்மைக்கொல்லாதே *
குன்றுபோல ஆடுகின்றோம், குழமணிதூரமே. 5

கல்லின் முந்நீர்மாற்றிவந்து, காவல்கடந்து * இலங்கை
அல்லல்செய்தான் உங்கள்கோமான், எம்மைஅமர்க்களத்து **
வெல்லகில்லாது அஞ்சினோம்காண், வெங்கதிரோன்சிறுவா! *
கொல்லவேண்டா ஆடுகின்றோம், குழமணிதூரமே. 6

மாற்றமாவது இத்தனையே , வம்மின் அரக்கருள்ளீர்! *
சீற்றம் நும்மேல் தீரவேண்டில் , சேவகம்பேசாதே **
ஆற்றல்சான்ற தொல்பிறப்பில் , அநுமனைவாழ்கவென்று *
கூற்றமன்னார்காணஆடீர், குழமணிதூரமே. 7

கவளயானை பாய்புரவி, தேரோடு அரக்கரெல்லாம்
துவள * வென்றவென்றியாளன், தன்தமர்கொல்லாமே **
தவளமாட நீடயோத்திக் , காவலன்தன் சிறுவன் *
குவளைவண்ணன் காணஆடீர், குழமணிதூரமே. 8

ஏடொத்தேந்தும் நீளிலைவேல் , எங்களிராவணனார்
ஓடிப்போனார் * நாங்கள் எய்த்தோம் , உய்வதோர்காரணத்தால் **
சூடிப்போந்தோம் உங்கள்கோமனாணை, தொடரேன்மின் *
கூடிகூடி ஆடுகின்றோம், குழமணிதூரமே. 9

§ வென்ற தொல்சீர்த்தென்னிலங்கை, வெஞ்சமத்து * அன்றரக்கர்
குன்றமன்னார் ஆடியுய்ந்த , குழமணிதூரத்தை **
கன்றிநெய்ந்நீர்நின்ற வேற்கைக் , கலியனொலிமாலை *
ஒன்றுமொன்றும் ஐந்தும்மூன்றும், பாடிநின்றாடுமினே. 10

அடிவரவு:: ஏத்துகின்றோம் எம்பிரானே ஞாலம் மணங்கள் வென்றி கல்லின் மாற்றம் கவளம் ஏடு வென்ற சந்தம்.

## *சந்தமலர்* (10 - 4)

*(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 1)*

*(கண்ணனை முலையுண்ண அழைத்தல்)*

§ சந்தமலர்க்குழல்தாழத் , தானுகந்தோடித்தனியே
வந்து * என்முலைத்தடந்தன்னை வாங்கி, நின்வாயில் மடுத்து **
நந்தன் பெறப்பெற்றநம்பீ! , நானுகந்துண்ணும் அமுதே *
எந்தைபெருமனே! உண்ணாய் , என்னம்மம் சேமமுண்ணாயே 1

வங்கமறிகடல் வண்ணா! , மாமுகிலேயொக்கும் நம்பீ *
செங்கண்நெடிய திருவே!, செங்கமலம் புரைவாயா! **

கொங்கை சுரந்திடஉன்னைக் , கூவியும்காணாதிருந்தேன் *
எங்கிருந்து ஆயர்களோடும், என் விளையாடுகின்றாயே?. 2

திருவில்பொலிந்த எழிலார் , ஆயர்தம் பிள்ளைகளோடு *
தெருவில்திளைக்கின்ற நம்பீ! , செய்கின்றதீமைகள் கண்டிட்டு **
உருகி என்கொங்கையின்தீம்பால், ஓட்டந்து பாய்ந்திடுகின்ற *
மருவிக்குடங்காலிருந்து , வாய்முலையுண்ணநீ வாராய். 3

மக்கள் பெறுதவம்போலும், வையத்து வாழும்மடவார் *
மக்கள் பிறர்கண்ணுக்கொக்கும், முதல்வா! , மதக்களிறன்னாய் **
செக்கரிளம்பிறைதன்னை வாங்கி, நின்கையில் தருவன் *
ஒக்கலை மேலிருந்து அம்மமுகந்து, இனிதுண்ண நீவாராய். 4

மைத்தகருங்குஞ்சி மைந்தா!, மாமருதூடுநடந்தாய் *
வித்தகனே விரையாதே, வெண்ணெய்விழுங்கும் விகிர்தா **
இத்தனை போதன்றி என்தன், கொங்கைசுரந்திருக்ககில்லா *
உத்தமனே! அம்மமுண்ணாய் , உலகளந்தாய்! அம்மமுண்ணாய் 5

பிள்ளைகள் செய்வன செய்யாய்ப், பேசின்பெரிதும் வலியை *
கள்ளம் மனத்திலுடையை , காணவேதீமைகள் செய்தி **
உள்ளமுருகி என்கொங்கை, ஓட்டந்து பாய்ந்திடுகின்ற *
பள்ளிக்குறிப்புச்செய்யாதே , பாலமுதுண்ண நீ வாராய். 6

தன்மகனாக வன்பேய்ச்சி, தான்முலையுண்ணக்கொடுக்க *
வன்மகனாய் அவளாவிவாங்கி , முலையுண்ட நம்பி **
நன்மகள் ஆய்மகளோடு, நானிலமங்கைமணாளா! *
என்மகனே! அம்மமுண்ணாய் , என்னம்மம் சேமமுண்ணாயே. 7

உந்தம்அடிகள் முனிவர், உன்னைநான் என்கையில் கோலால் *
நொந்திடமோதவுங்கில்லேன் , நுங்கள்தம் ஆநிரையெல்லாம் **
வந்துபுகுதரும்போது, வானிடைத்தெய்வங்கள்காண *
அந்தியம்போது அங்குநில்லேல் , ஆழியங்கையனே!வாராய். 8

பெற்றத்தலைவன் எங்கோமான், பேரருளாளன் மதலாய் *
சுற்றக்குழாத்திளங்கோவே!, தோன்றியதொல்புகழாளா **
கற்றினம்தோறும் மறித்துக், கானம்திரிந்த களிறே *
எற்றுக்கென் அம்மமுண்ணாதே, எம்பெருமான் இருந்தாயே?. 9

§ இம்மை இடர்கெடவேண்டி , ஏந்தெழில்தோள்கலிகன்றி *
செம்மைப்பனுவல் நூல்கொண்டு , செங்கணெடியவன்தன்னை **
அம்மமுண்ணென்று உரைக்கின்ற , பாடலிவை ஐந்துமைந்தும் *
மெய்ம்மை மனத்து வைத்தேத்த, விண்ணவர் ஆகலுமாமே. 10

அடிவரவு: பூங்கோதை தாயர் தாமோர் பெற்றார் சோத்தென கேவலம் புள்ளினை யாயும் கள்ளம் காரார் எங்கானும்

## பூங்கோதை (10 - 5)

*(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 2)*

*(கண்ணனைக் கைகொட்டி விளையாடும்படி கூறுதல்)*

§ பூங்கோதையாய்ச்சி , கடைவெண்ணைபுக்குண்ண *
ஆங்கவள் ஆர்த்துப்புடைக்கப் , புடையுண்டு **
ஏங்கியிருந்து , சிணுங்கிவிளையாடும்*
ஓங்கோதவண்ணனே! சப்பாணி ,
ஒளிமணிவண்ணனே! சப்பாணி. 1

தாயர்மனங்கள் தடிப்பத், தயிர் நெய்யுண்டே
எம்பிராக்கள்* இருநிலத்து எங்கள்தம் **
ஆயரழக! அடிகள் * அரவிந்த
வாயவனே! கொட்டாய்சப்பாணி ,
மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 2

தாமோருருட்டித் , தயிர்நெய் விழுங்கிட்டு *
தாமோ தவழ்வரென்று, ஆய்ச்சியர் தாம்பினால்**
தாமோதரக்கையால், ஆர்க்கத்தழும்பிருந்த *
தாமோதரா! கொட்டாய்சப்பாணி ,
தாமரைக்கண்ணனே! சப்பாணி. 3

பெற்றார்தளைகழலப் , பேர்ந்தங்கு அயலிடத்து *
உற்றாரொருவருமின்றி, உலகினில் **
மற்றாரும் அஞ்சப்போய் , வஞ்சப்பெண் நஞ்சுண்ட *
கற்றாயனே! கொட்டாய்சப்பாணி ,
கார்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 4

சோத்தென நின்னைத் , தொழுவன் வரம்தர *
பேய்ச்சிமுலையுண்ட பிள்ளாய் ** பெரியன
ஆய்ச்சியர் , அப்பம்தருவர் * அவர்க்காகச்
சாற்றியோராயிரம்சப்பாணி ,
தடங்கைகளால் கொட்டாய்சப்பாணி. 5

கேவலமன்று , உன்வயிறு * வயிற்றுக்கு
நான் , அவலப்பம் தருவன் ** கருவிளைப்
பூவலர் நீள்முடி , நந்தன் தன்போரேறே! *
கோவலனே! கொட்டாய் சப்பாணி ,
குடமாடீ! கொட்டாய் சப்பாணி. 6

புள்ளினை வாய் பிளந்து , பூங்குருந்தம்சாய்த்து *
துள்ளிவிளயாடித், தூங்குறி வெண்ணெயை **
அள்ளியகையால் , அடியேன்முலைநெருடும் *
பிள்ளைப் பிரான்! கொட்டாய்சப்பாணி ,
பேய்முலைஉண்டானே! சப்பாணி. 7

யாயும்பிறரும் , அறியாதயாமத்து *
மாயவலவைப் , பெண் வந்து முலைதர **
பேயென்று அவளைப் , பிடித்துஉயிரையுண்ட *
வாயவனே! கொட்டாய்சப்பாணி ,
மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 8

கள்ளக்குழவியாய்க் , காலால்சகடத்தை *
தள்ளியுதைத்திட்டுத் , தாயாய்வருவாளை**

மெள்ளத்தொடர்ந்து, பிடித்துஆருயிருண்ட *
வள்ளலே! கொட்டாய்சப்பாணி ,
மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 9

§ காரார்புயற்கைக் , கலிகன்றி மங்கையர்கோன் *
பேராளன்நெஞ்சில் , பிரியாது இடங்கொண்ட
சீராளா ** செந்தாமரைக்கண்ணா! , தண்துழாய்த் *
தாராளா! கொட்டாய்சப்பாணி ,
தடமார்வா! கொட்டாய்சப்பாணி. 10

அடிவரவு:: எங்கானும் குன்று உளைந்து தளர்ந்து நீண்டான் பழித்திட்ட படை நெறி சுரி நின்றார் மானம்

## *எங்கானும்* (10 - 6)

*(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 3 )*

*(மற்றை அவதாரங்களின் மேன்மையோடு*
*கிருஷ்ணாவதாரத்தின் எளிமையை அனுபவித்தல்)*

§ எங்கானும் ஈதொப்பதோர் மாயமுண்டே? ,
நரநாரணனாய் உலகத்து அறநூல் *
சிங்காமை விரித்தவன் எம்பெருமான் ,
அதுவன்றியும் செஞ்சுடரும் நிலனும் **
பொங்கார்கடலும் பொருப்பும்நெருப்பும்
நெருக்கிப்புகப் , பொன்மிடறு அத்தனைபோது *
அங்காந்தவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால்,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 1

குன்றொன்று மத்தா அரவமளவிக்,
குரைமாகடலைக்கடைந்திட்டு * ஒருகால்
நின்று உண்டைகொண்டோட்டி வன்கூன்நிமிர,
நினைந்தபெருமான், அதுவன்றியும் முன் **
நன்றுண்டதொல்சீர் மகரக்கடலேழ்,
மலையேழ் உலகேழ் ஒழியாமைநம்பி *
அன்றுண்டவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால்,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 2

உளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள் ,
உலப்பில்வலியாராவர்பால் * வயிரம்
விளைந்திட்டது என்றெண்ணி விண்ணோர்பரவ ,
அவர் நாளொழித்தபெருமான், முனநாள் **
வளைந்திட்ட வில்லாளி வல்வாளெயிற்று ,
மலைபோல் அவுணனுடல் வள்ளுகிரால் *
அளைந்திட்டவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால்,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 3

தளர்ந்திட்டு இமையோர் சரண்தாவெனத் ,
தான்சரணாய் முரணாயவனை * உகிரால்
பிளைந்திட்டு அமரர்க்கருள் செய்துகந்த ,
பெருமான்திருமால் விரிநீருலகை **
வளர்ந்திட்டதொல்சீர் விறல் மாவலியை ,
மண்கொள்ளவஞ்சித்து ஒருமாண்குறளாய் *
அளந்திட்டவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால் ,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 4

நீண்டான் குறளாய் நெடுவானளவும்,
அடியார்படும் ஆழ்துயராயவெல்லாம் *
தீண்டாமை நினைந்து இமையோரளவும்,
செலவைத்தபிரான், அதுவன்றியும்முன் **
வேண்டாமை நமன்தமர் என்தமரை,
வினவப்பெறுவாரலர்என்று * உலகேழ்
ஆண்டானவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால்,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 5

பழித்திட்ட இன்பப்பயன் பற்றறுத்துப் ,
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
ஒழித்திட்டு அவரைத்தனக்காக்கவல்ல,
பெருமான்திருமால், அதுவன்றியும்முன் **

தெழித்திட்டு எழுந்தே எதிர்நின்ற மன்னன்,
சினத்தோளவையாயிரமும் * மழுவால்
அழித்திட்டவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால் ,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 6

படைத்திட்டது இவ்வையம் உய்யமுனநாள்,
பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
துடைத்திட்டு அவரைத்தனக்காக்கவென்னத்,
தெளியாஅரக்கர் திறல்போயவிய **
மிடைத்திட்டெழுந்த குரங்கைப்படையா ,
விலங்கல்புகப்பாய்ச்சிவிம்ம * கடலை
அடைத்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால் ,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 7

நெறித்திட்ட மென்கூழை நல்நேரிழையோடு ,
உடனாய வில்லென்ன வல்லேயதனை*
இறுத்திட்டு அவளின்பம் அன்போடணைந்திட்டு,
இளங்கொற்றவனாய்த் துளங்காதமுந்நீர் *
செறித்திட்டு இலங்கைமலங்க அரக்கன் ,
செழுநீள்முடிதோளொடு தாள்துணிய *
அறுத்திட்டவன் காண்மின் இன்றுஆய்ச்சியரால் ,
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. 8

சுரிந்திட்ட செங்கேழுளைப் பொங்கரிமாத் ,
தொலையப்பிரியாது சென்றெய்தி * எய்தாது
இரிந்திட்டிடங்கொண்டு அடங்காததன்வாய் ,
இருகூறுசெய்த பெருமான் முனநாள் **
வரிந்திட்டவில்லால் மரமேழுமெய்து ,
மலைபோலுருவத்து ஓரிராக்கதி மூக்கு *
அரிந்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால் ,
அளைவெண்ணெய்யுண்டு ஆப்புண்டிருந்தவனே. 9

§ நின்றார் முகப்புச்சிறிதும் நினையான்,
வயிற்றை நிறைப்பான் உறிப்பால்தயிர்நெய் *
அன்று ஆய்ச்சியர் வெண்ணெய்விழுங்கி , உரலோடு
ஆப்புண்டிருந்தபெருமான் அடிமேல் **
நன்றாயதொல்சீர் வயல்மங்கையர்கோன் ,
கலியனொலிசெய் தமிழ்மாலைவல்லார் *
என்றானும் எய்தார் இடரின்பமெய்தி ,
இமையோர்க்கும் அப்பால் செலவெய்துவாரே. 10

அடிவரவு:: எங்கானும் குன்று உளைந்து தளர்ந்து நீண்டான் பழித்திட்ட படை நெறி சுரி நின்றார் மானம்

## *மானமுடைத்து* (10 - 7)

*(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 4 )*

*(கண்ணன் செய்தியைக்குறித்து ஆய்ச்சியரும் யசோதையும் முறையிடுதல்)*

§ மானமுடைத்து உங்களாயர்குலம்
அதனால் , பிறர் மக்கள் தம்மை *
ஊனமுடையன செய்யப்பெறாயென்று ,
இரப்பன் உரப்பகில்லேன் **
நானுமுரைத்திலேன் நந்தன்பணித்திலன் ,
நங்கைகாள்! நானென்செய்கேன்? *
தானும் ஓர்கன்னியும் கீழையகத்துத் ,
தயிர்கடைகின்றான் போலும்!. 1

காலையெழுந்து கடைந்த இம்மோர் விற்கப்
போகின்றேன் , கண்டே போனேன் *
மாலை நறுங்குஞ்சி நந்தன் மகனல்லால் ,
மற்று வந்தாரும் இல்லை **
மேலையகத்து நங்காய்! வந்து காண்மின்கள் ,
வெண்ணெயேயன்று * இருந்த
பாலும் பதின்குடம்கண்டிலேன் , பாவியேன்
என்செய்கேன்? என் செய்கேனோ?. 2

தெள்ளியவாய்ச் சிறியான் நங்கைகாள்! ,
உறிமேலைத் தடா நிறைந்த *
வெள்ளிமலை இருந்தாலொத்த வெண்ணெயை ,
வாரி விழுங்கியிட்டு **
கள்வன் உறங்குகின்றான் வந்துகாண்மின்கள் ,
கையெல்லாம் நெய், வயிறு
பிள்ளைபரமன்று * இவ்வேழுலகும் கொள்ளும் ,
பேதையேன் என் செய்கேனோ?. 3

மைந்நம்பு வேற்கணல்லாள் , முன்னம்
பெற்றவளை வண்ண நன்மாமேனி*
தன்னம்பிநம்பியும் இங்கு வளர்ந்தது ,
அவனிவை செய்தறியான் **
பொய்நம்பி புள்ளுவன் கள்வம் பொதியறை ,
போகின்றவா தவழ்ந்திட்டு *
இந்நம்பிநம்பியா ஆய்ச்சியர்க்குய்வில்லை ,
என்செய்கேன்? என் செய்கேனோ?. 4

தந்தைபுகுந்திலன் நான் இங்கிருந்திலேன்,
தோழிமார் ஆருமில்லை *
சந்தமலர்க்குழலாள் ,
தனியே விளையாடுமிடம் குறுகி **
பந்து பறித்துத்துகில்பற்றிக் கீறிப் ,
படிறன் படிறு செய்யும் *
நந்தன் மதலைக்கு இங்கென்கடவோம்?,
நங்காய்! என்செய்கேன்? என் செய்கேனோ?. 5

மண்மகள்கேள்வன் மலர்மங்கைநாயகன் ,
நந்தன் பெற்ற மதலை *
அண்ணல் இலைக்குழலூதி நம்சேரிக்கே ,
அல்லுத்தான் வந்தபின்னை **
கண்மலர்சோர்ந்து முலைவந்துவிம்மிக்,
கமலச்செவ்வாய் வெளுப்ப *
என்மகள் வண்ணமிருக்கின்றவா நங்காய்! ,
என்செய்கேன்? என் செய்கேனோ?. 6

ஆயிரம் கண்ணுடை இந்திரனாருக்கென்று ,
ஆயர் விழவெடுப்ப *
பாசனநல்லன பண்டிகளால் ,
புகப்பெய்த அதனையெல்லாம் **
போயிருந்துஅங்கொரு பூதவடிவு கொண்டு ,
உன்மகன் இன்று நங்காய்! *
மாயன் அதனையெல்லாம் முற்றவாரி,
வளைத்துண்டிருந்தான் போலும்!. 7

தோய்த்த தயிரும் நறுநெய்யும்பாலும் ,
ஓரோர் குடம்துற்றிடும் என்று *
ஆய்ச்சியர் கூடி அழைக்கவும் , நானிதற்கு
எள்கி இவனை நங்காய் **
சோத்தம்பிரான்! இவைசெய்யப்பெறாய்! என்று ,
இரப்பன் உரப்பகில்லேன் *
பேய்ச்சிமுலையுண்டபின்னை ,
இப்பிள்ளையைப்பேசுவது அஞ்சுவனே!. 8

ஈடும் வலியுமுடைய , இந்நம்பி
பிறந்த எழுதிங்களில் *
ஏடலர் கண்ணியினானைவளர்த்தி,
யமுனை நீராடப்போனேன் **
சேடன்திருமறுமார்வன் , கிடந்து
திருவடியால் * மலைபோல்
ஓடும் சகடத்தைச்சாடிய பின்னை ,
உரப்புவது அஞ்சுவனே!. 9

அஞ்சுவன்சொல்லி அழைத்திடநங்கைகாள்! ,
ஆயிரநாழி நெய்யைப் *
பஞ்சிய மெல்லடிப்பிள்ளைகளுண்கின்று ,
பாகந்தான் வையார்களே **

கஞ்சன்கடியன் கறவெட்டு நாளில் ,
என்கை வலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பனசெய்து வைத்தாய் நம்பீ !,
என்செய்கேன்? என் செய்கேனோ?. 10

அங்ஙனம் தீமைகள்செய்வர்களோ?நம்பீ!,
ஆயர் மடமக்களை *
பங்கயநீர் குடைந்தாடுகின்றார்கள் ,
பின்னே சென்றொளித்திருந்து **
அங்கவர்பூந்துகில் வாரிக்கொண்டிட்டு ,
அரவேரிடையார் இரப்ப *
மங்கை நல்லீர்! வந்துகொண்மினென்று ,
மரமேறியிருந்தாய் போலும். 11

அச்சம்திணைத்தனையில்லை இப்பிள்ளைக்கு ,
ஆண்மையும் சேவகமும் *
உச்சியில்முத்தி வளர்த்தெடுத்தேனுக்கு,
உரைத்திலன் தானின்றுபோய் **
பச்சிலைப்பூங்கடம்பேறி , விசைகொண்டு
பாய்ந்துபுக்கு * ஆயிரவாய்
நச்சழற்பொய்கையில் நாகத்தினோடு ,
பிணங்கி நீ வந்தாய்போலும்!. 12

தம்பரமல்லன ஆண்மைகளைத் , தனியே
நின்றுதாம் செய்வரோ? *
எம்பெருமான்! உன்னைப்பெற்ற வயிறுடையேன் ,
இனியான் என்செய்கேன்? **
அம்பரமேழும் அதிரும் இடிகுரல் ,
அங்கனற் செங்கணுடை *
வம்பவிழ் கானத்து மால்விடையோடு ,
பிணங்கி நீ வந்தாய் போலும்!. 13

§ அன்னநடை மடவாய்ச்சி வயிறடித்து
அஞ்ச , அருவரைபோல் *
மன்னுகருங்களிற்று ஆருயிர்வவ்விய ,
மைந்தனை மாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள் மங்கையர்காவலன் ,
காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகள் ஈரேழும் வல்லவர்க்கு ,
ஏதும் இடரில்லையே. 14

அடிவரவு: மானம் காலை தெள்ளிய மை தந்தை மண்மகள் ஆயிரம் தோய்த்த ஏடும் அஞ்சுவன் அங்ஙனம்அச்சம் தம்பரம் அன்னம் காதில்.

## *காதில் கடிப்பு* (10 - 8)

*((கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 5)*

*(ஆய்ச்சியொருத்தி கண்ணனோடு ஊடுதல்)*

§ காதில் கடிப்பிட்டுக், கலிங்கமுடுத்து *
தாது நல்ல , தண்ணந்துழாய் கொடணிந்து **
போது மறுத்துப் , புறமேவந்து நின்றீர் *
ஏதுக்கு இதுவென் ? , இதுவென்? இதுவென்னோ?. 1

துவராடையுடுத்து , ஒரு செண்டுசிலுப்பி *
கவராக முடித்துக், கலிக்கச்சுக் கட்டி **
சுவரார் கதவின்புறமே , வந்து நின்றீர் *
இவரார்? இதுவென்?, இதுவென் ? இதுவென்னோ!. 2

கருளக்கொடியொன்றுடையீர்!, தனிப் பாகீர் *
உருளச்சகடமது , உறக்கில் நிமிர்த்தீர் **
மருளைக்கொடு பாடிவந்து , இல்லம் புகுந்தீர் *
இருளத்து இதுவென்?, இதுவென் ? இதுவென்னோ?. 3

நாமம் பலவுமுடை , நாரண நம்பீ *
தாமத் துளவம் , மிக நாறிடுகின்றீர் **
காமனெனப்பாடி வந்து , இல்லம் புகுந்தீர் *
ஏமத்து இதுவென் ?, இதுவென்? இதுவென்னோ?. 4

சுற்றும் குழல் தாழச் , சுரிகையணைத்து *
மற்றும்பல, மாமணி பொன்கொடணிந்து **
முற்றம்புகுந்து, முறுவல் செய்து நின்றீர் *
எற்றுக்கு இதுவென்?, இதுவென்? இதுவென்னோ?. 5

ஆனாயரும் , ஆநிரையும் அங்கொழிய *
கூனாயதோர், கொற்ற வில்லொன்று கையேந்தி **
போனார் இருந்தாரையும் , பார்த்துப் புகுதீர் *
ஏனோர்கள் முன்னென்? , இதுவென்? இதுவென்னோ?. 6

மல்லேபொருத திரள்தோள், மணவாளீர்! *
அல்லேயறிந்தோம் , நும்மனத்தின் கருத்தை **
சொல்லாதொழியீர், சொன்ன போதினால்வாரீர் *
எல்லே! இதுவென் ?, இதுவென்? இதுவென்னோ?. 7

புக்காடரவம் , பிடித்தாட்டும் புனிதீர்! *
இக்காலங்கள், யாம் உமக்கு ஏதொன்றுமல்லோம் **
தக்கார் பலர் , தேவிமார் சாலவுடையீர் *
எக்கே! இதுவென்?, இதுவென்? இதுவென்னோ!. 8

ஆடி அசைந்து , ஆய் மடவாரொடு நீ போய்க் *
கூடிக்குரவைபிணை , கோமளப்பிள்ளாய் **
தேடித்திருமாமகள் , மண்மகள்நிற்ப *
ஏடி! இதுவென்?, இதுவென்? இதுவென்னோ?. 9

§ அல்லிக்கமலக்கண்ணனை , அங்கோராய்ச்சி *
எல்லிப்பொழுதூடிய , ஊடல்திறத்தை **
கல்லின்மலிதோள் , கலியன்சொன்னமாலை *
சொல்லித்துதிப்பாரவர் , துக்கமிலரே. 10

அடிவரவு: காதில் துவர் கருளக்கொடி நாமம் சுற்றும் ஆனாயர் மல்லே புக்கு ஆடி அல்லி புள்ளுரு

# புள்ளுருவாகி (10 - 9)

*(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - 6 ) (பழமொழி)*

*(தலைவியின் ஆற்றாமைக்குத் தாய் இரங்கித் தலைவனை வேண்டும் பாசுரம்)*

**§ புள்ளுருவாகி நள்ளிருள் வந்த ,**
**பூதனைமாள * இலங்கை**
**ஒள்ளெரிமண்டியுண்ணப் பணித்த ,**
**ஊக்கமதனை நினைந்தோ? ****
**கள்ளவிழ் கோதைகாதலும் , எங்கள்**
**காரிகை மாதர்கருத்தும் ***
**பிள்ளை தன்கையில் கிண்ணமேயொக்கப் ,**
**பேசுவது எந்தைபிரானே!.** 1

**மன்றில் மலிந்து கூத்துவந்தாடி ,**
**மால்விடையேழுமடர்த்து * ஆயர்**
**அன்றுநடுங்க ஆநிரைகாத்த ,**
**ஆண்மைகொலோ? அறியேன்நான் ****
**நின்ற பிரானே! நீள்கடல் வண்ணா!,**
**நீ இவள் தன்னை நின் கோயில்***
**முன்றிலெழுந்த முருங்கையில்தேனா ,**
**முன் கைவளை கவர்ந்தாயே.** 2

**ஆர்மலி ஆழிசங்கொடுபற்றி,**
**ஆற்றலை ஆற்றல்மிகுத்துக் ***
**கார்முகில்வண்ணா! கஞ்சனை முன்னம் ,**
**கடந்தநின் கடுந்திறல்தானோ? ****
**நேரிழைமாதை நித்திலத்தொத்தை ,**
**நெடுங்கடலமுதனையாளை ***
**ஆரெழில்வண்ணா! அங்கையில்வட்டாம் ,**
**இவளெனக்கருதுகின்றாயே.** 3

மல்கியதோளும் மானுரியதளும் ,
உடையவர் தமக்கும் ஓர்பாகம் *
நல்கியநலமோ? நரகனைதொலைத்த ,
கரதலத்தமைதியின் கருத்தோ? **
அல்லியங்கோதை அணிநிறம்கொண்டு
வந்து , முன்னேநின்றுபோகாய் *
சொல்லியென்? நம்பீ! இவளை நீ உங்கள்,
தொண்டர் கைத்தண்டென்றவாறே. 4

செருவழியாத மன்னர்கள்மாளத்,
தேர்வலங்கொண்டு அவர்செல்லும் *
அருவழிவானம் அதர்படக்கண்ட,
ஆண்மை கொலோ? அறியேன்நான் **
திருமொழிஎங்கள் தேமலர்க்கோதை ,
சீர்மையை நினைந்திலைஅந்தோ! *
பெருவழி நாவற்கனியினும்எளியள்,
இவளெனப்பேசுகின்றாயே. 5

அரக்கியராகம் புல்லெனவில்லால் ,
அணிமதிள் இலங்கையார்கோனை *
செருக்கழித்து அமரர்பணியமுன்னின்ற ,
சேவகமோ? செய்ததின்று **
முருக்கிதழ்வாய்ச்சி முன்கை வெண்-
சங்கம்கொண்டு , முன்னே நின்று போகாய் *
எருக்கிலைக்காக எறிமழுவோச்சல் ,
என்செய்வது? எந்தைபிரானே!. 6

ஆழியன்திண்தேர் அரசர்வந்திறைஞ்ச,
அலைகடலுலகம் முன்னாண்ட *
பாழியந்தோளோராயிரம் வீழப் ,
படை மழுப்பற்றிய வலியோ? **

மாழை மென்னோக்கி மணிநிறம்கொண்டுவந்து,
முன்னே நின்று போகாய் *
கோழி வெண்முட்டைக்கு என்செய்வது? எந்தாய்! ,
குறுந்தடி நெடுங்கடல்வண்ணா!. 7

பொருந்தலன் ஆகம்புள்ளுவந்தேற ,
வள்ளுகிரால்பிளந்து * அன்று
பெருந்தகைக்கு இரங்கி வாலியைமுனிந்த ,
பெருமைகொலோ? செய்ததின்று **
பெருந்தடங்கண்ணி சுரும்புறுகோதை ,
பெருமையை நினைந்திலைபேசில் *
கருங்கடல்வண்ணா! கவுள்கொண்ட நீராம் ,
இவளெனக்கருதுகின்றாயே. 8

நீரழல்வானாய் நெடுநிலம்காலாய்,
நின்றநின்நீர்மையை நினைந்தோ? *
சீர்கெழுகோதை என்னலதிலளென்று ,
அன்னதோர் தேற்றன்மைதானோ? **
பார்கெழுபவ்வத்தார் அமுதனைய ,
பாவையைப்பாவம் செய்தேனுக்கு *
ஆரழலோம்பும் அந்தணன்தோட்டமாக ,
நின்மனத்து வைத்தாயே. 9

§ வேட்டத்தைக்கருதாது அடியிணைவணங்கி ,
மெய்ம்மை நின்று எம்பெருமானை *
வாள்திறல்தானை மங்கையர்தலைவன் ,
மானவேல்கலியன் வாயொலிகள் **
தோட்டலர் பைந்தார்ச்சுடர் முடியானைப் ,
பழமொழியால் பணிந்துரைத்த *
பாட்டிவைபாடப் பத்திமைபெருகிச் ,
சித்தமும்திருவொடு மிகுமே. 10

அடிவரவு:: புள் மன்றில் ஆர் மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருந்தலன் நீர் வேட்டத்தை திருத்தாய்

# திருத்தாய் (10 - 10)

*(தலைமகனைப்பிரிந்த தலைமகள் ஆற்றாது கூறிய பாசுரம் )*

§ திருத்தாய் ,செம்போத்தே *
திருமாமகள், தன் கணவன் *
மருத்தார்தொல்புகழ் , மாதவனை வர *
திருத்தாய் செம்போத்தே!. 1

கரையாய் காக்கைப்பிள்ளாய்! *
கருமாமுகில் போல், நிறத்தன் **
உரையார் தொல்புகழ் , உத்தமனைவர *
கரையாய் காக்கைப்பிள்ளாய்!. 2

கூவாய் பூங்குயிலே! *
குளிர்மாரி தடுத்துகந்த **
மாவாய் கீண்ட, மணிவண்ணனைவர *
கூவாய் பூங்குயிலே!. 3

கொட்டாய் பல்லிக்குட்டி! *
குடமாடி உலகளந்த **
மட்டார்பூங்குழல், மாதவனைவரக்*
கொட்டாய் பல்லிக்குட்டி!. 4

§ சொல்லாய் பைங்கிளியே *
சுடராழி வலனுயர்த்த **
மல்லார்தோள், வடவேங்கடவனை வர *
சொல்லாய் , பைங்கிளியே!. 5

கோழி, கூவென்னுமால் *
தோழி!, நான் என்செய்கேன் **
ஆழிவண்ணர் , வரும்பொழுதாயிற்று *
கோழி கூவென்னுமால். 6

காமற்கு, என் கடவேன்? *
கருமாமுகில், வண்ணற்கல்லால் **
பூமேலைங்கணை, கோத்துப் புகுந்தெய்யக் *
காமற்கு, என்கடவேன்?. 7

இங்கே, போதுங்கொலோ? *
இனவேல் நெடுங்கண் களிப்ப **
கொங்கார்சோலைக் , குடந்தைக்கிடந்தமால் *
இங்கே, போதுங்கொலோ?. 8

இன்னார், என்றறியேன் *
அன்னே! ஆழியொடும் **
பொன்னார்சார்ங்க , முடையஅடிகளை *
இன்னார் என்றறியேன். 9

§ தொண்டீர்! பாடுமினோ *
சுரும்பார் பொழில், மங்கையர்கோன் **
ஒண்தார்வேல் , கலியனொலிமாலைகள் *
தொண்டீர்! பாடுமினோ. 10

அடிவரவு: திருத்தாய் கரையாய் கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே இன்னார் தொண்டீர் குன்றமொன்று.

## பதினோராம் பத்து

### குன்றம் ஒன்று (11 - 1)

*(பிரிவாற்றாத தலைவி இரங்கிக்கூறும் பாசுரம்)*

§ குன்றமொன்றெடுத்தேந்தி * மாமழை
அன்று காத்தஅம்மான் ** அரக்கரை
வென்றவில்லியார் , வீரமேகொலோ? *
தென்றல்வந்து , தீவீசும் என்செய்கேன்?. 1

காரும் வார்பனிக் , கடலும் அன்னவன் *
தாரும் மார்வமும் , கண்டதண்டமோ? **

சோருமாமுகில் , துளியினூடு வந்து *
ஈரவாடை தான் , ஈரும் என்னையே!. 2

சங்கும் மாமையும் , தளரும்மேனிமேல் *
திங்கள் வெங்கதிர், சீறும்என்செய்கேன்? **
பொங்கு வெண்திரைப் , புணரிவண்ணனார் *
கொங்கலார்ந்ததார் , கூவும் என்னையே!. 3

அங்கோராய்க்குலத்துள், வளர்ந்துசென்று *
அங்கோர், தாயுருவாகி வந்தவள் **
கொங்கைநஞ்சுண்ட , கோயின்மை கொலோ? *
திங்கள் வெங்கதிர் , சீறுகின்றதே. 4

அங்கு ஓராளரியாய் , அவுணனை *
பங்கமா , இருகூறு செய்தவன் **
மங்குல்மாமதி , வாங்கவே கொலோ? *
பொங்குமாகடல், புலம்புகின்றதே!. 5

சென்று வார்சிலைவளைத்து , இலங்கையை *
வென்றவில்லியார் , வீரமேகொலோ **
முன்றில் பெண்ணைமேல் , முளரிக்கூட்டகத்து **
அன்றிலின்குரல் , அடரும்என்னையே!. 6

பூவைவண்ணனார் , புள்ளின்மேல் வர *
மேவிநின்றுநான் , கண்டதண்டமோ **
வீவிலைங்கணை , வில்லி அம்புகோத்து *
ஆவியே, இலக்காக எய்வதே!. 7

மால் இனந்துழாய் , வரும் என்நெஞ்சகம் *
மாலின் அந்துழாய் , வந்து என்னுள்புக **
கோலவாடையும் , கொண்டு வந்தது ஓர் *
ஆலிவந்ததால் அரிது காவலே!. 8

கெண்டையொண்கணும், துயிலும் * என்னிறம்
பண்டு பண்டு போலொக்கும் * மிக்கசீர்த்
தொண்டரிட்ட , பூந்துளவின் வாசமே *
வண்டுகொண்டுவந்து , ஊதுமாகிலே?. 9

§ அன்று பாரதத்து , ஐவர்தூதனாய் *
சென்றமாயனைச் , செங்கண்மாலினை **
மன்றிலார்புகழ் , மங்கைவாட்கலி
கன்றி * சொல்வல்லார்க்கு , அல்லலில்லையே. 10

அடிவரவு: குன்றம் காரும் சங்கு அங்கோராய் அங்கோராளரி சென்று பூவை மால் கெண்டை அன்று குன்றமெடுத்து.

## குன்றமெடுத்து (11 - 2)

*(தலைவி பிரிவாற்றாது வருந்திக்கூறும் பாசுரம்)*

§ குன்றமெடுத்து மழை தடுத்து , இளையாரொடும் *
மன்றில் குரவை பிணைந்த மால் , என்னை மால்செய்தான் **
முன்றில் தனிநின்ற பெண்ணைமேல் , கிடந்தீர்கின்ற *
அன்றிலின் கூட்டைப் , பிரிக்ககிற்பவர் ஆர்கொலோ?. 1

பூங்குருந்தொசித்து ஆனைகாய்ந்து , அரிமாச்செகுத்து *
ஆங்குவேழத்தின் , கொம்புகொண்டு ** வன்பேய்முலை
வாங்கியுண்ட அவ்வாயன் நிற்க , இவ்வாயன்வாய் *
ஏங்கு வேய்ங்குழல் , என்னோடாடும் இளமையே!. 2

மல்லோடு கஞ்சனும் , துஞ்சவென்ற மணிவண்ணன் *
அல்லிமலர்த்தண்துழாய் , நினைந்திருந்தேனையே **
எல்லியில் மாருதம் வந்தடும் , அதுவன்றியும் *
கொல்லை வல்லேற்றின் மணியும், கோயின்மை செய்யுமே! 3

பொருந்துமாமரம் , ஏழும் எய்தபுனிதனார் *
திருந்துசேவடி , என்மனத்து நினைதொறும் **
கருந்தண்மாகடல் , கங்குலார்க்கும் அதுவன்றியும் *
வருந்த வாடைவரும், இதற்கு இனியென்செய்கேன்?. 4

அன்னை முனிவதும் , அன்றிலின் குரல் ஈர்வதும் *
மன்னு மறிகடலார்ப்பதும் , வளை சோர்வதும் **
பொன்னங்கலையல்குல், அன்னமென்னடைப் பூங்குழல் *
பின்னைமணாளர் , திறத்தமாயின பின்னையே. 5

ஆழியும் சங்குமுடைய , நங்களடிகள்தாம் *
பாழிமையான கனவில் , நம்மைப் பகர்வித்தார் **
தோழியும்நானுமொழிய , வையம் துயின்றது *
கோழியும் கூகின்றதில்லைக், கூரிருளாயிற்றே!. 6

காமன்தனக்கு முறையல்லேன் , கடல்வண்ணனார் *
மாமணவாளர், எனக்குத்தானும் மகன்சொல்லில் **
யாமங்கள் தோறுஎரிவீசும் , என்னிளம் கொங்கைகள் *
மாமணி வண்ணர் , திறத்தவாய் வளர்கின்றவே!. 7

மஞ்சுறுமாலிருஞ்சோலை , நின்ற மணாளனார் *
நெஞ்சம் நிறைகொண்டு போயினார் , நினைகின்றிலர் **
வெஞ்சுடர் போய் விடியாமல் , எவ்விடம் புக்கதோ! *
நஞ்சு உடலம் துயின்றால் , நமக்கு இனிநல்லதே!. 8

காமன் கணைக்கு ஓரிலக்கமாய் , நலத்தின்மிகு *
பூமருகோல , நம்பெண்மை சிந்தித்திராதுபோய் **
தூமலர்நீர்கொடு தோழி! , நாம்தொழுதேத்தினால் *
கார்முகில்வண்ணரைக் , கண்களால் காணலாங்கொலோ? 9

§ வென்றி விடையுடன் , ஏழடர்த்தஅடிகளை *
மன்றில்மலிபுகழ் , மங்கைமன் கலிகன்றிசொல் **
ஒன்று நின்றஒன்பதும் , உரைப்பவர்தங்கள் மேல் *
என்றும் நில்லாவினை , ஒன்றும் சொல்லில் உலகிலே. 10

அடிவரவு: குன்றம் பூ மல்லொடு பொருந்து அன்னை ஆழி காமந்தனக்கு மஞ்சுறு காமங்கணைக்கு வென்றி மன்னிலங்கு

# மன்னிலங்கு (11 - 3)

*((தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்: அறத்தொடுநிற்றல்)*

§ மன்னிலங்கு பாரதத்துத் , தேரூர்ந்து * மாவலியைப்
பொன்னிலங்கு திண்விலங்கில்வைத்து , பொருகடல்சூழ் **
தென்னிலங்கையீடழித்த, தேவர்க்கு இதுகாணீர் *
என்னிலங்கு சங்கோடு , எழில்தோற்றிருந்தேனே!. 1

இருந்தான் என்னுள்ளத்து, இறைவன் * கறைசேர்
பருந்தாட்களிற்றுக் , அருள்செய்த ** செங்கண்
பெருந்தோள் நெடுமாலைப் , பேர்பாடியாட *
வருந்தாது என்கொங்கை , ஒளிமன்னும் அன்னே!. 2

அன்னே! , இவரைஅறிவன் * மறைநான்கும்
முன்னேயுரைத்த , முனிவர் இவர் வந்து **
பொன்னேய் வளைகவர்ந்து போகார், மனம்புகுந்து *
என்னே? இவரெண்ணும் , எண்ணம் அறியோமே!. 3

அறியோமேயென்று , உரைக்கலாமே? எமக்கு *
வெறியார்பொழில்சூழ் , வியன்குடந்தைமேவி **
சிறியான் ஓர்பிள்ளையாய் , மெள்ளநடந்திட்டு *
உறியார் நறுவெண்ணெய் , உண்டுகந்தார் தம்மையே. 4

தம்மையே நாளும் , வணங்கித் தொழுவார்க்கு *
தம்மையேயொக்க , அருள் செய்வராதலால் **
தம்மையே நாளும் , வணங்கித்தொழுதிறைஞ்சி *
தம்மையேபற்றா , மனத்து என்றும் வைத்தோமே. 5

வைத்தார் அடியார், மனத்தினில் வைத்து * இன்பம்
உற்றார் ஒளிவிசும்பில் , ஓரடிவைத்து ** ஓரடிக்கும்
எய்த்தாது மண்ணென்று , இமையோர் தொழுதிறைஞ்சி *
கைத்தாமரை குவிக்கும் , கண்ணன் என் கண்ணனையே. 6

கண்ணன் , மனத்துள்ளே நிற்கவும் * கைவளைகள்
என்னோகழன்ற? , இவை என்ன மாயங்கள்? **
பெண்ணானோம் , பெண்மையோம் நிற்க * அவன்மேய
அண்ணல் மலையும் , அரங்கமும் பாடோமே. 7

பாடோமே? , எந்தை பெருமானை? * பாடிநின்று
ஆடோமே?, ஆயிரம் பேரானை? ** பேர்நினைந்து
சூடோமே?, சூடுந்துழாயலங்கல்சூடி * நாம்
கூடோமே?, கூடக்குறிப்பாகில்? நன்னெஞ்சே!. 8

நன்னெஞ்சே! நம்பெருமான் , நாளும் இனிதமரும் *
அன்னம்சேர்கானல் , அணியாலி கைதொழுது **
முன்னம்சேர் வல்வினைகள் போக, முகில்வண்ணன் *
பொன்னஞ்சேர் சேவடிமேல் , போதணியப் பெற்றோமே!. 9

§ பெற்றாரார் , ஆயிரம் பேரானைப் * பேர்பாடப்
பெற்றான் , கலியனொலிசெய் தமிழ்மாலை **
கற்றார் ஓ! முற்றுலகாள்வர் , இவைகேட்கல்
உற்றார்க்கு * உறுதுயரில்லை , உலகத்தே. 10

அடிவரவு:: மன்னிலங்கு இருந்தான் அன்னே அறியோம் தம்மை வைத்தார் கண்ணன் பாடோமே நன்னெஞ்சே பெற்றாரார் நிலை

## *நிலையிடம்* (11 - 4)

*(அவதாரங்களின் மகிமை)*

§ நிலையிடம் எங்குமின்றி நெடுவெள்ளம்
உம்பர் , வளநாடு மூடஇமையோர் *
தலையிடமற்றெமக்கு ஓர் சரணில்லையென்ன,
அரணாவன் என்னும் அருளால் **
அலைகடல்நீர் குழம்ப அகடாட
ஓடி , அகல்வானுரிஞ்ச * முதுகில்
மலைகளை மீது கொண்டு வருமீனை மாலை ,
மறவாது இறைஞ்சு என் மனனே!. 1

செருமிகுவாளெயிற்ற அரவொன்றுசுற்றித் ,
திசைமண்ணும் விண்ணுமுடனே *
வெருவரவெள்ளை வெள்ளம் முழுதும் குழம்ப ,
இமையோர்கள் நின்றுகடைய **
பருவரையொன்று நின்று முதுகில்பரந்து ,
சுழலக்கிடந்து துயிலும் *
அருவரையன்ன தன்மையடலாமையான ,
திருமால் நமக்கு ஓரரணே. 2

தீதறுதிங்கள் பொங்கு சுடரும் உம்பர் ,
உலகேழினோடுமுடனே *
மாதிர மண்சுமந்த வடகுன்றும் நின்ற ,
மலையாறும் ஏழுகடலும் **
பாதமர்சூழ் குளம்பின கமண்டலத்தின் ,
ஒருபால் ஒடுங்க வளர்சேர் *
ஆதிமுன் ஏனமாகி அரணாய மூர்த்தி
அது , நம்மை ஆளுமரசே. 3

தளையவிழ் கோதைமாலை இருபால் தயங்க ,
எரிகான்றிரண்டு தறுகண் *
அளவெழ வெம்மை மிக்கஅரியாகி ,
அன்று பரியோன் சினங்களவிழ **
வளையுகிராளி மொய்ம்பின் மறவோனதாகம்,
மதியாது சென்றொருகிரால் *
பிளவெழவிட்ட குட்டமது வையமூடு ,
பெருநீரின் மும்மைபெரிதே. 4

வெந்திறல்வாணன் வேள்வியிடமெய்தி ,
அங்குஓர் குறளாகி மெய்ம்மையுணர *
செந்தொழில் வேத நாவின் முனியாகி ,
வையம் அடிமூன்று இரந்துபெறினும் **

மந்தரமீது போகிமதி நின்று இறைஞ்ச ,
மலரோன் வணங்க வளர்சேர் *
அந்தரமேழினூடு செலவுய்த்த பாதமது ,
நம்மை யாளுமரசே. 5

இருநில மன்னர் தம்மை இருநாலுமெட்டும் ,
ஒருநாலுமொன்றுமுடனே *
செருநுதலோடுபோகி அவராவிமங்க ,
மழுவாளில் வென்றதிறலோன் **
பெருநிலமங்கை மன்னர் மலர்மங்கைநாதர் ,
புலமங்கைகேள்வர் புகழ்சேர் *
பெருநிலமுண்டு உமிழ்ந்த பெருவாயராகி ,
அவர் நம்மை ஆள்வர்பெரிதே. 6

இலைமலி பள்ளியெய்தி இதுமாயமென்ன ,
இனமாய மான்பின் எழில்சேர் *
அலைமலி வேற்கணாளை அகல்விப்பதற்கு ,
ஓர்உருவாய மானையமையா *
கொலைமலி எய்துவித்த கொடியோனிலங்கை,
பொடியாக வென்றியமருள் *
சிலைமலி செஞ்சரங்கள் செலவுய்த்த, நங்கள்
திருமால் நமக்கு ஓரரணே. 7

முன்னுலகங்களேழும் இருள்மண்டியுண்ண,
முதலோடு வீடுமறியாது *
என்னிது? வந்ததென்னஇமையோர் திசைப்ப ,
எழில்வேதமின்றி மறைய **
பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கி,
இருள் தீர்ந்து இவ்வையமகிழ *
அன்னமதாய் இருந்து அங்கறநூலுரைத்த ,
அது நம்மையாளுமரசே. 8

துணைநிலை மற்றெமக்கொருள தென்றிராது ,
தொழுமின்கள் தொண்டர்! தொலைய *
உணமுலை முன்கொடுத்த உரவோளதாவி ,
உகவுண்டு வெண்ணெய் மருவி **
பணைமுலையாயர் மாதர் உரலோடு கட்ட ,
அதனோடுமோடி, அடல்சேர் *
இணைமருதிற்று வீழநடைகற்ற தெற்றல் ,
வினைபற்றறுக்கும் விதியே. 9

§ கொலைகெழு செம்முகத்த களிறொன்று கொன்று ,
கொடியோனிலங்கை பொடியா *
சிலைகெழு செஞ்சரங்கள் செலவுய்த்த நங்கள் ,
திருமாலை வேலைபுடைசூழ் **
கலிகெழுமாடவீதி வயல்மங்கை மன்னு ,
கலிகன்றி சொன்ன பனுவல் *
ஒலிகெழுபாடல் பாடி உழல்கின்ற தொண்டரவர்,
ஆள்வர் உம்பருலகே. 10

அடிவரவு:: நிலை செரு தீதறு தளை வெந்திறல் இருநிலம் இலைமலி முன் கொலை மான்

## *மானமரும்* (11 - 5)

*(தோழியர் இருவர் எம்பெருமானது நீர்மையையும் மேன்மையையும் எதிரெதிராகக் கூறுதல்)*

§ மானமரு மென்னோக்கி , வைதேவி இன்துணையா *
கானமரும் கல்லதர்போய்க், காடுறைந்தான் காணேடீ! **
கானமரும் கல்லதர்போய் , காடுறைந்த பொன்னடிக்கள் *
வானவர்தம் சென்னி , மலர்கண்டாய் சாழலே!. 1

தந்தை தளைகழலத் , தோன்றிப்போய் * ஆய்ப்பாடி
நந்தன் குலமதலையாய் , வளர்ந்தான் காணேடீ! **
நந்தன் குலமதலையாய் வளர்ந்தான் , நான்முகற்குத்
தந்தைகாண் * எந்தைபெருமான் காண்சாழலே!. 2

ஆழ்கடல் சூழ் வையகத்தார் , ஏசப் போய் * ஆய்ப்பாடித்
தாழ்குழலார் வைத்த, தயிருண்டான் காணேடீ! **
தாழ்குழலார் வைத்த, தயிருண்டபொன்வயிறு * இவ்
வேழுலகுமுண்டும் , இடமுடைத்தால்சாழலே!. 3

அறியாதார்க்கு , ஆனாயனாகிப்போய் * ஆய்ப்பாடி
உறியார் நறுவெண்ணெய் , உண்டுகந்தான் காணேடீ! **
உறியார் நறுவெண்ணெய் , உண்டுகந்த பொன்வயிற்றுக்கு *
எறிநீருலகனைத்தும் , எய்தாதால் சாழலே!. 4

வண்ணக்கருங்குழல் , ஆய்ச்சியால் மொத்துண்டு *
கண்ணிக்குறுங்கயிற்றால் , கட்டுண்டான் காணேடீ! **
கண்ணிக்குறுங்கயிற்றால் , கட்டுண்டானாகிலும் *
எண்ணற்கரியன் , இமையோர்க்கும் சாழலே!. 5

கன்றப்பறைகறங்கக் , கண்டவர்தம் கண்களிப்ப *
மன்றில்மரக்கால் , கூத்து ஆடினான் காணேடீ! **
மன்றில்மரக்கால் , கூத்து ஆடினானாகிலும் *
என்றும்அரியன் , இமையோர்க்கும் சாழலே!. 6

கோதைவேல் ஐவர்க்காய் , மண்ணகலம் கூறிடுவான் *
தூதனாய், மன்னவனால் , சொல்லுண்டான் காணேடீ! **
தூதனாய், மன்னவனால் , சொல்லுண்டானாகிலும் *
ஓதநீர்வையகம் , முன்னுண்டு உமிழ்ந்தான் சாழலே!. 7

பார்மன்னர்மங்கப் , படைதொட்டுவெஞ்சமத்து *
தேர்மன்னர்க்காய் அன்று , தேரூர்ந்தான் காணேடீ! **
தேர்மன்னர்க்காய் அன்று , தேரூர்ந்தானாகிலும் *
தார்மன்னர் தங்கள் , தலைமேலான் சாழலே!. 8

கண்டார் இரங்கக் , கழியக்குறளுருவாய் *
வண்தாரான் வேள்வியில் , மண்ணிரந்தான் காணேடீ! **

**வண்தாரான் வேள்வியில் , மண்ணிரந்தானாகிலும் ***
**விண்டேழுலகுக்கும் , மிக்கான்காண்சாழலே!.** 9

**§ கள்ளத்தால் மாவலியை , மூவடிமண்கொண்டளந்தான் ***
**வெள்ளத்தான் வேங்கடத்தான் , என்பரால் காணேடீ! ****
**வெள்ளத்தான் , வேங்கடத்தானேலும் * கலிகன்றி**
**உள்ளத்தினுள்ளே , உளன்கண்டாய் சாழலே!.** 10

அடிவரவு:: மானமரும் தந்தை ஆழ்கடல் அறியாதார்க்கு வண்ணம் கன்ற
கோதை பார்மன்னர் கண்டார் கள்ளத்தால் மைந்நின்ற.

## *மைந்நின்ற* (11 - 6)

*( ப்ரளயத்தில் பாதுகாத்த எம்பெருமானையே ஆஶ்ரயிக்கும்படி உலகத்தார்க்கு உபதேசித்தல்)*

**§ மைந்நின்ற கருங்கடல்வாயுலகின்றி ,**
**வானவரும் யாமுமெல்லாம் ***
**நெய்ந்நின்ற சக்கரத்தன் திருவயிற்றில் ,**
**நெடுங்காலம் கிடந்தது ஓரீர் ****
**எந்நன்றி செய்தாரா , ஏதிலோர்**
**தெய்வத்தை ஏத்துகின்றீர்? ***
**செய்ந்நன்றி குன்றேன்மின் , தொண்டர்காள்!**
**அண்டனையே ஏத்தீர்களே.** 1

**நில்லாத பெருவெள்ளம் , நெடுவிசும்பின்**
**மீதோடி நிமிர்ந்தகாலம் ***
**மல்லாண்ட தடக்கையால், பகிரண்டம்**
**அகப்படுத்த காலத்து ** அன்று**
**எல்லாரும் அறியாரோ , எம்பெருமான்**
**உண்டுமிழ்ந்த எச்சில்தேவர் ***
**அல்லாதார் தாமுளரே? , அவனருளே**
**உலகாவது அறியீர்களே?.** 2

நெற்றிமேல் கண்ணானும் , நிறைமொழிவாய்
நான்முகனும் நீண்டநால்வாய் *
ஒற்றைக்கைவெண்பகட்டின் ஒருவனையும் ,
உள்ளிட்ட அமரரோடும் *
வெற்றிப்போர்க்கடலரையன் , விழுங்காமல்
தான்விழுங்கி உய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான் , குணம்பரவாச்
சிறுதொண்டர் கொடியவாறே!. 3

பனிப்பரவைத் திரைததும்பப் , பாரெல்லாம்
நெடுங்கடலேயான காலம் *
இனிக்களைகண் இவர்க்கில்லையென்று ,
உலகமேழினையும் ஊழில்வாங்கி **
முனித்தலைவன், முழங்கொளிசேர் ,
திருவயிற்றில் வைத்தும்மை உய்யக்கொண்ட *
கனிக்களவத் திருவுருவத்தொருவனையே ,
கழல்தொழுமா கல்லீர்களே. 4

பாராரும் காணாமே , பரவைமா
நெடுங்கடலேயான காலம் *
ஆரானும் அவனுடைய திருவயிற்றில் ,
நெடுங்காலம் கிடந்தது ** உள்ளத்
தோராத உணர்விலீர்! உணருதிரேல் ,
உலகளந்த உம்பர்கோமான் *
பேராளன் பேரான , பேர்கள்
ஆயிரங்களுமே பேசீர்களே. 5

பேயிருக்கும் நெடுவெள்ளம் , பெருவிசும்பின்
மீதோடிப்பெருகு காலம் *
தாயிருக்கும் வண்ணமே , உம்மைத்தன்
வயிற்றிருத்தி உய்யக்கொண்டான் **

போயிருக்க மற்றிங்கோர் , புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர் * பெற்ற
தாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ? ,
மாட்டாத தகவற்றீரே!. 6

மண்ணாடும் விண்ணாடும் , வானவரும்
தானவரும் மற்றுமெல்லாம் *
உண்ணாத பெருவெள்ளம் , உண்ணாமல்
தான்விழுங்கி உய்யக்கொண்ட **
கண்ணாளன் கண்ணமங்கை நகராளன் ,
கழல்சூடி * அவனையுள்ளத்து
எண்ணாத மானிடத்தை , எண்ணாத
போதெல்லாம் இனியவாறே. 7

மறம் கிளர்ந்து கருங்கடல் நீர் , உரந்துரந்து
பரந்தேறி அண்டத்தப்பால் *
புறம்கிளர்ந்த காலத்துப் , பொன்னுலகம்
ஏழினையும் ஊழில்வாங்கி **
அறம் கிளர்ந்த திருவயிற்றின் , அகம்படியில்
வைத்தும்மை ஊய்யக்கொண்ட *
நிறம்கிளர்ந்த கருஞ்சோதி , நெடுந்தகையை
நினையாதார் நீசர்தாமே. 8

அண்டத்தின் முகடழுந்த , அலைமுந்நீர்த்
திரைததும்ப ஆ! ஆ! என்று *
தொண்டர்க்கும் அமரர்க்கும், முனிவர்க்கும்
தானருளி ** உலகமேழும்
உண்டொத்த திருவயிற்றின் , அகம்படியில்
வைத்தும்மை உய்யக்கொண்ட *
கொண்டற்கை மணிவண்ணன் , தண்குடந்தை
நகர்பாடியாடீர்களே. 9

§ தேவரையும் அசுரரையும் , திசைகளையும்
கடல்களையும் மற்றும் முற்றும் *
யாவரையும் ஒழியாமே , எம்பெருமான்
உண்டுமிழ்ந்தது அறிந்துசொன்ன **
காவளரும் பொழில்மங்கைக் , கலிகன்றி
ஒலிமாலை கற்று வல்லார் *
பூவளரும் திருமகளால் அருள்பெற்றுப் ,
பொன்னுலகில் பொலிவர் தாமே. 10

அடிவரவு: மை நில்லாத நெற்றி பனி பாராரும் பேய் மண் மறம் அண்டத்தின் தேவரை நீள்நாகம்

## *நீள்நாகம்* (11 - 7)

*(எம்பெருமான் திறத்தில் ஈடுபடாத அவயவங்கள் பயனற்றன என்று கூறல்)*

§ நீள் நாகம் சுற்றி , நெடுவரை நட்டு * ஆழ்கடலைப்
பேணான் கடைந்து, அமுதம் கொண்டு உகந்த பெம்மானை **
பூணார மார்வனைப் , புள்ளூரும் பொன்மலையை *
காணாதார் கண்என்றும் , கண்ணல்ல கண்டாமே. 1

நீள்வான் குறளுருவாய் , நின்றிரந்து மாவலி மண் *
தாளால் அளவிட்ட , தக்கணைக்கு மிக்கானை **
தோளாத மாமணியைத் , தொண்டர்க்கினியானை *
கேளாச்செவிகள் , செவியல்ல கேட்டாமே. 2

தூயானைத் , தூய மறையானை * தென்னாலி
மேயானை , மேவாளுயிருண்டு அமுதுண்ட
வாயானை ** மாலை வணங்கி , அவன் பெருமை
பேசாதார் * பேச்சு என்றும் , பேச்சல்ல கேட்டாமே. 3

கூடா இரணியனைக் , கூருகிரால் மார்விடந்த *
ஓடா அடலரியை , உம்பரார் கோமானை **
தோடார் நறுந்துழாய் , மார்வனை ஆர்வத்தால் *
பாடாதார் பாட்டு என்றும் , பாட்டல்ல கேட்டாமே. 4

மையார்  கடலும் , மணிவரையும் மாமுகிலும் *
கொய்யார் குவளையும் , காயாவும் போன்று இருண்ட
மெய்யானை * மெய்ய மலையானைச், சங்கேந்தும்
கையானை * கைதொழாக் , கையல்ல கண்டாமே. 5

கள்ளார் துழாயும் , கணவலரும் கூவிளையும் *
முள்ளார் முளரியும், ஆம்பலும் முன் கண்டக்கால் **
புள்ளாய் ஓரேனமாய்ப் , புக்கிடந்தான் பொன்னடிக்கென்று *
உள்ளாதாருள்ளத்தை, உள்ளமாக் கொள்ளோமே. 6

கனையார் கடலும் , கருவிளையும் காயாவும்
அனையானை* அன்பினால், ஆர்வத்தால் ** என்றும்
சுனையார் மலரிட்டுத், தொண்டராய் நின்று
நினையாதார் * நெஞ்சு என்றும் , நெஞ்சல்ல கண்டாமே. 7

வெறியார் கருங்கூந்தல், ஆய்ச்சியர் வைத்த *
உறியார் நறுவெண்ணெய் , தானுகந்து உண்ட
சிறியானை ** செங்கணெடியானைச் , சிந்தித்து
அறியாதார் * என்றும் , அறியாதார் கண்டாமே. 8

§ தேனொடு வண்டாலும் , திருமாலிருஞ்சோலை *
தானிடமாக் கொண்டான் , தடமலர்க் கண்ணிக்காய் **
ஆன்விடையேழன்றடர்த்தாற்கு , ஆளானாரல்லாதார்*
மானிடவரல்லரென்று , என்மனத்தே வைத்தேனே. 9

§ மெய்ந்நின்ற, பாவம் அகல * திருமாலைக்
கைந்நின்ற ஆழியான் , சூழும் கழல்சூடி **
கைந்நின்ற வேற்கைக் , கலியனொலிமாலை *
ஐயொன்றும் ஐந்தும் , இவைபாடி யாடுமினே. 10

அடிவரவு: நீள்நாகம் நீள்வான் தூயான் கூடா மையார் கள்ளார் கனை வெறி தேனோடு மெய் மாற்றம்

# மாற்றமுள        (11 - 8)

*(தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேண்டும் என்று ஆழ்வார் எம்பெருமானைப் ப்ரார்த்தித்தல்)*

§ மாற்றமுள , ஆகிலும் சொல்லுவன் * மக்கள்
தோற்றக்குழி , தோற்றுவிப்பாய் கொல்? என்று இன்னம் **
ஆற்றங்கரை வாழ்மரம் போல், அஞ்சுகின்றேன் *
நாற்றச்சுவை , ஊறு ஒலியாகிய நம்பீ. 1

சீற்றமுள , ஆகிலும் செப்புவன் * மக்கள்
தோற்றக்குழி , தோற்றுவிப்பாய் கொல் என்றஞ்சி **
காற்றத்திடைப்பட்ட , கலவர் மனம்போல *
ஆற்றத்துளங்கா நிற்பன், ஆழிவலவா!. 2

தூங்கார் பிறவிக்கள், இன்னம் புகப்பெய்து *
வாங்காயென்று சிந்தித்து , நானதற்கு அஞ்சி **
பாம்போடொரு கூரையிலே , பயின்றாற்போல் *
தாங்காது உள்ளம் தள்ளும் , என் தாமரைக்கண்ணா!. 3

உருவார் பிறவிக்கள், இன்னம் புகப்பெய்து *
திரிவாயென்று சிந்தித்தி , என்றதற்கஞ்சி **
இருபாடெரிகொள்ளியின் , உள்எறும்பே போல் *
உருகாநிற்கும் என்னுள்ளம், ஊழி முதல்வா!. 4

கொள்ளக் குறையாத , இடும்பைக் குழியில் *
தள்ளி புகப்பெய்தி கொல்? , என்று அதற்குஅஞ்சி **
வெள்ளத்திடைப்பட்ட , நரியினம் போலே *
உள்ளம் துளங்காநிற்பன் , ஊழி முதல்வா!. 5

படைநின்ற , பைந்தாமரையோடு * அணி நீலம்
மடை நின்றுஅலரும் , வயலாலி மணாளா **
இடையனெறிந்த மரமே , ஒத்திராமே *
அடைய அருளாய் ,எனக்கு உன்தனருளே. 6

§ வேம்பின்புழு, வேம்பன்றியுண்ணாது * அடியேன்
நான்பின்னும், உன்சேவடியன்றி நயவேன் **
தேம்பலிளந்திங்கள் , சிறை விடுத்து * ஐவாய்ப்
பாம்பினணைப் , பள்ளி கொண்டாய் பரஞ்சோதீ. 7

§ அணியார் பொழில்சூழ், அரங்க நகரப்பா *
துணியேன் இனி , நின்னருளல்லதுஎனக்கு **
மணியே! மணி மாணிக்கமே! , மதுசூதா *
பணியாய் எனக்கு உய்யும்வகை , பரஞ்சோதீ!. 8

§ நந்தா நரகத்து, அழுந்தாவகை * நாளும்
எந்தாய்! தொண்டரானவர்க்கு , இன்னருள்செய்வாய் **
சந்தோகா! தலைவனே!, தாமரைக் கண்ணா *
அந்தோ! அடியேற்கு, அருளாய் உன்னருளே. 9

§ குன்றமெடுத்து , ஆநிரை காத்தவன் தன்னை *
மன்றில் புகழ் , மங்கைமன் கலிகன்றி சொல் **
ஒன்று நின்ற ஒன்பதும் , வல்லவர்தம்மேல் *
என்றும் வினையாயின , சாரகில்லாவே. 10

அடிவரவு: மாற்றம் சீற்றம் தூங்கார் உருவார் கொள்ள படை வேம்பின் அணியார் நந்தா குன்றம் நிதியினை.

# திருக்குறுந்தாண்டகம்

§ நிதியினைப் பவளத்தூணை, நெறிமையால் நினையவல்லார் *
கதியினைக் கஞ்சன்மாளக், கண்டுமுன் அண்டமாளும்**
மதியினை மாலைவாழ்த்தி , வணங்கி என்மனத்துவந்த *
விதியினைக்கண்டு கொண்ட , தொண்டனேன் விடுகிலேனே. 1

காற்றினைப் புனலைத்தீயைக் , கடிமதிளிலங்கை செற்ற
ஏற்றினை * இமயம் மேய , எழில்மணித் திரளை ** இன்ப
ஆற்றினை அமுதந்தன்னை , அவுணன் ஆருயிரையுண்ட
கூற்றினை * குணங்கொண்டுஉள்ளம்! , கூறு நீ கூறுமாறே. 2

பாயிரும் பரவைதன்னுள், பருவரைதிரித்து * வானோர்க்
காயிருந்து அமுதம் கொண்ட , அப்பனை எம்பிரானை **
வேயிருஞ்சோலை சூழ்ந்து , விரிகதிர் இரிய நின்ற *
மாயிருஞ்சோலை மேய , மைந்தனைவணங்கினேனே. 3

கேட்க யானுற்றதுண்டு , கேழலாய் உலகம்கொண்ட *
பூக்கெழுவண்ணனாரைப் , போதரக் கனவில் கண்டு **
வாக்கினால் கருமந்தன்னால் , மனத்தினால் சிரத்தை தன்னால் *
வேட்கை மீதூர வாங்கி , விழுங்கினேற்கு இனியவாறே. 4

இரும்பனன்றுண்ட நீர்போல் , எம்பெருமானுக்கு * என்தன்
அரும்பெறலன்புபுக்கிட்டு, அடிமைபூண்டு உய்ந்து போனேன் **
வரும் புயல் வண்ணனாரை , மருவியென் மனத்துவைத்து *
கரும்பின்னின்சாறு போலப் , பருகினேற்கு இனிய வாறே. 5

மூவரில் முதல்வனாய , ஒருவனை, உலகம் கொண்ட *
கோவினைக்குடந்தை மேய , குருமணித் திரளை ** இன்பப்
பாவினைப் பச்சைத்தேனைப் , பைம்பொன்னை அமரர் சென்னிப்
பூவினை* புகழும் தொண்டர் , என்சொல்லிப் புகழ்வர் தாமே? 6

இம்மையை மறுமை தன்னை , எமக்கு வீடாகிநின்ற *
மெய்ம்மையை விரிந்த சோலை , வியன்திருவரங்கம் மேய **
செம்மையைக் கருமை தன்னைத், திருமலை ஒருமையானை *
தன்மையை நினைவார் என்தன் , தலைமிசை மன்னுவாரே. 7

வானிடைப்புயலைமாலை , வரையிடைப் பிரசம் ஈன்ற *
தேனிடைக் கரும்பின்சாற்றைத் , திருவினை மருவிவாழார்**
மானிடப்பிறவி அந்தோ!, மதிக்கிலர் கொள்க * தந்தம்
ஊனிடைக் குரம்பை வாழ்க்கைக்கு, உறுதியே வேண்டினாரே. 8

உள்ளமோ ஒன்றிநில்லாது, ஓசையிலெரி நின்றுண்ணும் *
கொள்ளி மேலெறும்புபோலக், குழையுமால் என்தனுள்ளம் **
தெள்ளியீர்! தேவர்க்கெல்லாம் , தேவராய் உலகம் கொண்ட *
ஒள்ளியீர்! உம்மையல்லால் , எழுமையும் துணையிலோமே. 9

சித்தமும் செவ்வை நில்லாது, என்செய்கேன் தீவினையேன் ? ,
பத்திமைக்கு அன்புடையேனாவதே?, பணியாய்எந்தாய் **
முத்தொளி மரதகமே!, முழங்கொளி முகில்வண்ணா * என்
அத்த! நின்னடிமையல்லால் , யாதுமொன்று அறிகிலேனே. 10

தொண்டெல்லாம் பரவிநின்னைத் , தொழுது அடிபணியுமாறு
கண்டு * தான் கவலை தீர்ப்பான் ஆவதே?, பணியாய் எந்தாய்! **
அண்டமாய் எண்திசைக்கும் , ஆதியாய் நீதியான *
பண்டமாம் பரமசோதி! , நின்னையே பரவுவேனே. 11

ஆவியை அரங்கமாலை, அழுக்குடம்பு எச்சில் வாயால் *
தூய்மையில் தொண்டனேன் நான் ,சொல்லினேன் தொல்லைநாமம் **
பாவியேன் பிழத்தவாறென்று , அஞ்சினேற்கு அஞ்சலென்று *
காவிபோல் வண்ணர்வந்து , என்கண்ணுளே தோன்றினாரே. 12

இரும்பனன்றுண்ட நீரும் , போதரும் கொள்க * என்தன்
அரும்பிணி பாவமெல்லாம் , அகன்றன என்னைவிட்டு **

சுரும்பமர் சோலை சூழ்ந்த , அரங்கமா கோயில்கொண்ட *
கரும்பினைக் கண்டுகொண்டு, என் கண்ணிணை களிக்குமாறே 13

காவியை வென்றகண்ணார், கலவியே கருதி * நாளும்
பாவியேனாக எண்ணி , அதனுள்ளே பழுத்தொழிந்தேன் **
தூவிசேரன்னம் மன்னும் , சூழ்புனல் குடந்தையானை *
பாவியேன் பாவியாது , பாவியேன் ஆயினேனே!. 14

முன்பொலா இராவணன்தன், முதுமதிளிலங்கை வேவித்து *
அன்பினால் அனுமன்வந்து, ஆங்கடியிணை பணியநின்றார்க்கு **
என்பெலாம் உருகியுக்கிட்டு , என்னுடை நெஞ்சமென்னும் *
அன்பினால் ஞானநீர்கொண்டு , ஆட்டுவன் அடியனேனே. 15

மாயமான் மாயச்செற்று, மருதிறநடந்து * வையம்
தாயமாபரவை பொங்கத் , தடவரை திரித்து * வானோர்க்கு
ஈயுமால் எம்பிரானார்க்கு ,என்னுடைச் சொற்களென்னும் *
தூயமாமாலை கொண்டு , சூட்டுவன்தொண்டனேனே. 16

பேசினார் பிறவிநீத்தார், பேருளான்பெருமைபேசி *
ஏசினார் உய்ந்துபோனார், என்பது இவ்வுலகின்வண்ணம் **
பேசினேன் ஏசமாட்டேன், பேதையேன் பிறவிநீத்தற்கு *
ஆசையோ பெரிதுகொள்க, அலைகடல் வண்ணர்பாலே. 17

இளைப்பினை இயக்கம்நீக்கி, இருந்து முன் இமையைக்கூட்டி *
அளப்பில் ஐம்புலனடக்கி , அன்பு அவர் கண்ணே வைத்து **
துளக்கமில் சிந்தை செய்து, தோன்றலும் சுடர்விட்டு * ஆங்கே
விளக்கினை விதியில் காண்பார், மெய்ம்மையைக் காண்கிற்பாரே 18

§ பிண்டியார் மண்டை ஏந்திப், பிறர்மனை திரிதந்துண்ணும்,
உண்டியான் * சாபம் தீர்த்த , ஒருவனூர் ** உலகமேத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம் , கச்சிபேர் மல்லையென்று
மண்டினார் * உய்யலல்லால், மற்றையார்க்கு உய்யலாமே?. 19

§ வானவர் தங்கள் கோனும், மலர்மிசை அயனும் * நாளும்
தேமலர் தூவியேத்தும் , சேவடிச்செங்கண்மாலை**
மானவேல்கலியன்சொன்ன, வண்தமிழ் மலை நாலைந்தும்*
ஊனமதின்றிவல்லார், ஒளிவிசும்பு ஆள்வர்தாமே. 20

அடிவரவு: நிதியினை காற்றினை பாயிரும் கேட்க இரும்பு மூவரில் இம்மையை வானிடை உள்ளம் சித்தம் தொண்டு ஆவியை இரும்பு காவியை முன்பொலா மாயம் பேசினார் இளைப்பினை பிண்டியார் வானவர் மின்.

# திருநெடுந்தாண்டகம்

*(முதற் பத்துப்பாசுரங்கள் – ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்தவை)*

§ மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய் ,
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தானாய் *
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப்பில்லாப்,
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது ** எண்ணும்
பொன்னுருவாய் மணியுருவில் பூதமைந்தாய்ப்,
புனலுருவாய் அனலுருவில் திகழும் சோதி*
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை,
தளிர்புரையும் திருவடி என்தலைமேலவே. 1

பாருருவிநீரெரிகால் விசும்புமாகிப்,
பல்வேறு சமயமுமாய்ப்பரந்து நின்ற *
ஏருருவில் மூவருமேயெனநின்ற,
இமையவர்தம் திருவுருவேறெண்ணும்போது **
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ ,
ஒன்றுமாகடலுருவம் ஒத்து நின்ற *
மூவுருவும் கண்டபோது ஒன்றாம் சோதி ,
முகிலுருவம் எம்மடிகள் உருவந்தானே. 2

திருவடிவில் கருநெடுமால் சேயனென்றும் ,
திரேதைக்கண் வளையுருவாய்த்திகழ்ந்தான் என்றும் *
பெருவடிவிற்கடலமுதம் கொண்டகாலம் ,
பெருமானைக்கருநீல வண்ணன்தன்னை**

ஒரு வடிவத்தோர்உருவென்று உணரலாகாது ,
ஊழிதோறூழி நின்றேத்தலல்லால் *
கருவடிவிற் செங்கண்ணவண்ணன் தன்னைக்,
கட்டுரையே யாரொருவர்காண்கிற்பாரே?. 3

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன்தன்னை ,
இருநிலம் கால் தீ நீர் விண் பூதமைந்தாய் *
செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித் ,
திசை நான்குமாய் திங்கள் ஞாயிறாகி **
அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா
அந்தணனை , அந்தணர் மாட்டு அந்திவைத்த
மந்திரத்தை * மந்திரத்தால் மறவாதென்றும் ,
வாழுதியேல் வாழலாம் மடநெஞ்சமே!. 4

ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப ,
ஒருகாலும் காமருசீரவுணனுள்ளத்து *
எண்மதியும் கடந்து அண்டமீது போகி ,
இருவிசும்பினூடு போயெழுந்து ** மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிரவோடித் ,
தாரகையின் புறம்தடவி அப்பால்மிக்கு *
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை ,
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே. 5

அலம்புரிந்த நெடுந்தடக்கை அமரர்வேந்தன் ,
அஞ்சிறைப்புள் தனிப்பாகன் அவுணர்க்கு என்றும் *
சலம்புரிந்தங்கருளில்லாத் தன்மையாளன் ,
தானுகந்த ஊரெல்லாம் தன்தாள் பாடி **
நிலம்பரந்துவரும் கலுழிப்பெண்ணையீர்த்த ,
நெடுவேய்கள் படுமுத்த முந்தவுந்தி *
புலம்பரந்து பொன்விளைக்கும் பொய்கைவேலிப் ,
பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே !. 6

வற்புடைய வரைநெடுந்தோள் மன்னர்மாள ,
வடிவாய மழுவேந்தி உலகமாண்டு *
வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த ,
வேள்முதலா வென்றானூர் விந்தைமேய **
கற்புடைய மடக்கன்னி காவல்பூண்ட,
கடிபொழில்சூழ் நெடுமறுகில்கமலவேலி *
பொற்புடைய மலையரையன் பணியநின்ற ,
பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே !. 7

§ நீரகத்தாய்! நெடுவரையினுச்சிமேலாய்! ,
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய் * ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய்!,
உள்ளுவாருள்ளத்தாய் ** உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா! ,
காமரு பூங்காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய் *பேராது என்னெஞ்சினுள்ளாய்!,
பெருமான்! உன் திருவடியே பேணினேனே. 8

வங்கத்தால் மாமணி வந்துஉந்து முந்நீர்
மல்லையாய்! , மதிள் கச்சி ஊராய்! பேராய் *
கொங்கத்தார் வளங்கொன்றை அலங்கல் மார்வன்,
குலவரையன் மடப்பாவை இடப்பால்கொண்டான் **
பங்கத்தாய்!, பாற்கடலாய்! பாரின்மேலாய்! ,
பனி வரையினுச்சியாய்! பவளவண்ணா *
எங்குற்றாய் எம்பெருமான்! உன்னை நாடி ,
ஏழையேன் இங்ஙனமே உழிதருகேனே!. 9

பொன்னானாய்! பொழிலேழும் காவல்பூண்ட,
புகழானாய்! , இகழ்வாயதொண்டனேன் நான் *
என்னானாய்! என்னானாய் ! என்னலல்லால் ,
என்னறிவன் ஏழையேன்? ** உலகமேத்தும்

தென்னானாய் வடவானாய் குடபாலானாய் ,
குணபாலமதயானாய்! இமையோர்க்கு என்றும்
முன்னானாய்! * பின்னானார் வணங்கும் சோதி! ,
திருமூழிக்களத்தானாய்! முதலானாயே!. 10

*( இது முதல் பத்துப் பாசுரங்கள் – தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்ட தாய் இரங்கிக் கூறியவை)*

பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவைபேணாள் ,
பனிநெடுங்கண் நீர்ததும்பப் பள்ளிகொள்ளாள் *
எள்துணைப்போது என்குடங்கால் இருக்ககில்லாள் ,
எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும் **
மட்டுவிக்கி மணிவண்டு முரலும் கூந்தல் ,
மடமானை இது செய்தார் தம்மை * மெய்யே
கட்டுவிச்சி சொல்லென்னச் சொன்னாள், நங்காய்!
கடல்வண்ணர் இதுசெய்தார் காப்பாராரே?. 11

நெஞ்சுருகிக்கண்பனிப்ப நிற்கும் சோரும் ,
நெடிதுயிர்க்கும் உண்டறியாள் உறக்கம்பேணாள்*
நஞ்சரவில் துயிலமர்ந்த நம்பீ! என்னும்,
வம்பார் பூம்வயலாலிமைந்தா! என்னும்**
அஞ்சிறைய புட்கொடியே ஆடும் பாடும்,
அணியரங்கமாடுதுமோ தோழீ என்னும் *
என்சிறகின் கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன்,
இருநிலத்து ஓர் பழிபடைத்தேன் ஏ, பாவமே!. 12

கல்லெடுத்துக் கல்மாரிகாத்தாய்! என்றும்,
காமரு பூங்கச்சியூரகத்தாய்! என்றும் *
வில்லிறுத்து மெல்லியல்தோள்தோய்ந்தாய்! என்றும்,
வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே! என்றும் **
மல்லடர்த்து மல்லரை அன்று அட்டாய்! என்றும்,
மாகீண்ட கைதலத்து என்மைந்தா! என்றும் *
சொல்லெடுத்துத் தன்கிளியைச்சொல்லே என்று ,
துணைமுலைமேல் துளிசோரச்சோர்கின்றாளே!. 13

§ முளைக்கதிரைக்குறுங்குடியுள் முகிலை , மூவா
மூவுலகும் கடந்து அப்பால் முதலாய் நின்ற *
அளப்பரிய ஆரமுதை அரங்கம்மேய
அந்தணனை , அந்தணர்தம் சிந்தையானை**
விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்,
வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு*
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று ,
மடக்கிளியைக்கைகூப்பி வணங்கினாளே. 14

கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சிமேய
களிறு என்றும் , கடல்கிடந்த கனியே! என்றும் *
அல்லியம் பூமலர்ப்பொய்கைப் பழனவேலி ,
அணியழுந்தூர் நின்றுகந்த அம்மான் என்றும் **
சொல்லுயர்ந்த நெடுவீணை முலைமேல்தாங்கித் ,
தூமுறுவல் நகைஇறையே தோன்றநக்கு *
மெல்விரல்கள் சிவப்பெய்தத்தடவி ஆங்கே,
மென்கிளிபோல் மிகமிழற்றும் என்பேதையே. 15

§ கன்றுமேய்த்து இனிதுகந்தகாளாய்! என்றும் ,
கடிபொழில்சூழ்கணபுரத்து என்கனியே! என்றும் *
மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும் ,
வடதிருவேங்கடம் மேயமைந்தா! என்றும் **
வென்றசுரர் குலங்களைந்த வேந்தே! என்றும் ,
விரிபொழில்சூழ் திருநறையூர் நின்றாய்! என்றும் *
துன்றுகுழல் கருநிறத்து என்துணையே! என்றும் ,
துணைமுலைமேல் துளிசோரச்சோர்கின்றாளே!. 16

பொங்கார் மெல்லிளம் கொங்கை பொன்னேபூப்பப் ,
பொருகயல் கண்நீரரும்பப் போந்து நின்று *
செங்காலமடப்புறவம் பெடைக்குப்பேசும் ,
சிறுகுரலுக்கு உடலுருகிச்சிந்தித்து ** ஆங்கே

தண்காலும் தண்குடந்தை நகரும் பாடித் ,
தண்கோவலூர் பாடியாடக்கேட்டு *
நங்காய்! நங்குடிக்கு இதுவோ நன்மை? என்ன ,
நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே!. 17

கார்வண்ணம் திருமேனி கண்ணும்வாயும்,
கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்*
பார்வண்ண மடமங்கைபத்தர் பித்தர்,
பனிமலர்மேல் பாவைக்குப் பாவம்செய்தேன்**
ஏர்வண்ண என்பேதை என்சொல் கேளாள் ,
எம்பெருமான் திருவரங்கம் எங்கே? என்னும் *
நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன் என்னும்,
இதுவன்றோ நிறையழிந்தார் நிற்குமாறே?. 18

முற்றாரா வனமுலையாள்பாவை, மாயன்
மொய்யகலத்துள்ளிருப்பாள் அஃதும் கண்டு
அற்றாள் * தன் நிறையழிந்தாள் ஆவிக்கின்றாள் ,
அணியரங்கம் ஆடுதுமோ? தோழீ! என்னும் **
பெற்றேன் வாய்ச்சொல்லிறையும் பேசக்கேளாள் ,
பேர்பாடித் தண்குடந்தை நகரும்பாடி *
பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்,
பொருவற்றாள் என்மகள் உம்பொன்னும் அஃதே. 19

தேராளும் வாளரக்கன் செல்வம்மாளத் ,
தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கி *
போராளன் ஆயிரம்தோள் வாணன்மாளப் ,
பொருகடலை அரண்கடந்து புக்குமிக்க
பாராளன் **.பாரிடந்து பாரையுண்டு,
பாருமிழ்ந்து பரளந்து பாரையாண்ட
பேராளன்* பேரோதும் பெண்ணை மண்மேல் ,
பெருந்தவத்தள் என்றல்லால் பேசலாமே?. 20

§ மைவண்ண நறுங்குஞ்சி குழல்பின்தாழ,
மகரம்சேர் குழை இருபாடு இலங்கியாட *
எய்வண்ண வெஞ்சிலையே துணையா , இங்கே
இருவராய்வந்தார் என்முன்னே நின்றார் **
கைவண்ணம் தாமரைவாய் கமலம் போலும் ,
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே *
அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும்தோழீ!,
அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே!. 21

நைவளமொன்று ஆராயா நம்மைநோக்கா ,
நாணினார் போலிறையே நயங்கள் பின்னும் *
செய்வளவில் என்மனமும் கண்ணும் ஓடி,
எம்பெருமான் திருவடிக்கீழணைய ** இப்பால்
கைவளையும் மேகலையும் காணேன் , கண்டேன்
கனமகரக்குழையிரண்டும் நான்குதோளும் *
எவ்வளவுண்டு எம்பெருமான்கோயில்? என்றேற்கு ,
இதுவன்றோ எழிலாலி? என்றார்தாமே. 22

உள்ளூரும் சிந்தைநோய் எனக்கேதந்து , என்
ஒளிவளையும் மாநிறமும் கொண்டார் இங்கே *
தெள்ளூரும் இளந்தெங்கின் தேறல்மாந்திச்,
சேலுகளும் திருவரங்கம் நம்மூரென்னக் **
கள்ளூரும் பைந்துழாய் மாலையானைக்,
கனவிடத்தில் யான்காண்பன், கண்டபோது *
புள்ளூரும்கள்வா! நீ போகேலென்பன் ,
என்றாலும் இதுநமக்கோர் புலவிதானே? 23

இருகையில் சங்கிவைநில்லா எல்லே பாவம்! ,
இலங்கொலிநீர் பெரும்பௌவம் மண்டியுண்ட *
பெருவயிற்ற கருமுகிலே ஒப்பர்வண்ணம் ,
பெருந்தவத்தர் அருந்தவத்து முனிவர்சூழ **

ஒருகையில்சங்கு ஒருகை மற்றாழிஏந்தி ,
உலகுண்ட பெருவாயர் இங்கேவந்து * என்
பொருகயல்கண் நீரரும்பப் புலவிதந்து ,
புனலரங்கம் ஊரென்று போயினாரே!. 24

மின்னிலங்கு திருவுருவும் பெரியதோளும்,
கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும் *
தன்னலர்ந்த நறுந்துழாய்மலரின் கீழே,
தாழ்ந்திலங்கு மகரம்சேர் குழையும்காட்டி**
என்னலனும் என்னிறைவும் என்சிந்தையும்,
என்வளையும் கொண்டு என்னையாளும் கொண்டு *
பொன்னலர்ந்த நறுஞ்செருந்திப்பொழிலினூடே ,
புனலரங்கம் ஊரென்றுபோயினாரே!. 25

*(வண்டு விடுதூது )*

தேமருவு பொழிலிடத்து மலர்ந்தபோதைத்,
தேனதனை வாய்மடுத்து , உன்பெடையும் நீயும் *
பூமருவி இனிதமர்ந்து பொறியிலார்ந்த,
அறுகால சிறுவண்டே! தொழுதேன் உன்னை **
ஆமருவி நிரைமேய்த்த அமரர்கோமான்,
அணியழுந்தோர் நின்றானுக்கு இன்றே சென்று *
நீமருவியஞ்சாதே நின்று ஓர்மாது,
நின்நயந்தாள் என்றிறையே இயம்பிக்காணே. 26

*(நாரை விடுதூது )*

§ செங்கால மடநாராய்! இன்றே சென்று ,
திருக்கண்ணபுரம்புக்கு என்செங்கண்மாலுக்கு *
என்காதல் என்துணைவர்க்கு உரைத்தியாகில்,
இதுவொப்பது எமக்கின்பம் இல்லை ** நாளும்
பைங்கானமீதெல்லாம் உனதேயாகப்,
பழனமீன் கவர்ந்துண்ணத் தருவன் * தந்தால்
இங்கேவந்து இனிதிருந்து உன்பெடையும் நீயும் ,
இருநிலத்தில் இனிதின்பம் எய்தலாமே. 27

*(பறைவைகளைத் தூது விடுத்த தலைவி தலைவன் வரக் காணாமையால் அவனைப் பற்றி ஊடல்கொண்டு தோழிக்கு கூறிய பாசுரம்)*

**தென்னிலங்கையரண் சிதறி அவுணன் மாளச் ,**
**சென்றுலகம் மூன்றினையும் திரிந்தோர் தேரால் ***
**மன்னிலங்கு பாரதத்தை மாளவூர்ந்த ,**
**வரையுருவின் மாகளிற்றைத்தோழீ ** என்தன்**
**பொன்னிலங்கு முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு ,**
**போகாமை வல்லேனாய்ப் புலவியெய்தி ***
**என்னிலங்கமெல்லாம் வந்து இன்பமெய்த ,**
**எப்பொழுதும் நினைந்துருகி இருப்பன்நானே.** 28

*(இந்த இரண்டு பாசுரங்கள் – ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்தவை)*

**§ அன்றாயர் குலமகளுக்கு அரையன் தன்னை ,**
**அலைகடலைக் கடைந்தடைத்த அம்மான்தன்னை ***
**குன்றாத வலியரக்கர்கோனை மாளக் ,**
**கொடுஞ்சிலை வாய்ச்சரம் துரந்து குலம்களைந்து**
**வென்றானை ** குன்றெடுத்த தோளினானை ,**
**விரிதிரை நீர் விண்ணகரம் மருவிநாளும்**
**நின்றானை * தண்குடந்தைக்கிடந்த மாலை ,**
**நெடியானை அடிநாயேன் நினைந்திட்டேனே.** 29

**§ மின்னுமாமழை தவழும் மேகவண்ணா! ,**
**விண்ணவர்தம் பெருமானே! அருளாயென்று ***
**அன்னமாய் முனிவரோடு அமரரேத்த ,**
**அருமறையை வெளிப்படுத்த அம்மான்தன்னை ****
**மன்னுமா மணிமாட மங்கைவேந்தன் ,**
**மானவேல் பரகாலன் கலியன் சொன்ன ***
**பன்னியநூல் தமிழ்மாலை வல்லார் , தொல்லைப்**
**பழவினையை முதலரியவல்லார் தாமே.** 30

அடிவரவு: மின் பார் திருவடிவில் இந்திரற்கும் ஒண்மிதி அலம் வற்பு நீரகம் வங்கத்தால் பொன் பட்டு நெஞ்சு கல் முளை கல்லுயர்த்த கன்று பொங்கு கார் முற்று தேராளும் மை நைவளம் உள்ளூரும் இருகை மின் தேமருவு செங்கால தென்னிலங்கை அன்றாயர் மின்னுமா உயர்வு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம் !.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம் !

## *திருமங்கையாழ்வார் அருளிச்செய்த*
# திருவெழுகூற்றிருக்கை

***தனியன்கள்***

***எம்பெருமானார் அருளிச்செய்தது***

**வாழி பரகாலன் வாழி கலிகன்றி,**
**வாழி குறையலூர் வாழ்வேந்தன் * - வாழியரோ**
**மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்**
**தூயோன் சுடர்மான வேல்!**

**§ ஒரு பேருந்தி, இருமலர்த்தவிசில் ***
**ஒருமுறை, அயனையீன்றனை * ஒருமுறை**
**இருசுடர், மீதினில் இயங்கா * மும்மதிள்**
**இலங்கை, இருகால்வளைய * ஒரு சிலை**
**ஒன்றிய ஈரெயிற்று அழல்வாய், வாளியின்**
**அட்டனை * மூவடி, நானிலம் வேண்டி ***
**முப்புரிநூலொடு, மானுரியிலங்கு**
**மார்வினின் * இருபிறப்பு, ஒரு மாணாகி ***
**ஒருமுறை ஈரடி, மூவுலகு அளந்தானை ***
**நால்திசை நடுங்க, அஞ்சிறைப்பறவையேறி ***
**நால்வாய் மும்மதத்து, இருசெவி**
**ஒரு தனிவேழத்து அரந்தையை * ஒரு நாள்**
**இருநீர், மடுவுள்தீர்த்தனை * முத்தீ**
**நான்மறை, ஐவகைவேள்வி * அறுதொழில்**
**அந்தணர், வணங்கும்தன்மையை * ஐம்புலன்**
**அகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கி**
**முக்குணத்துஇரண்டவை அகற்றி * ஒன்றினில்**
**ஒன்றி நின்று * ஆங்கு இருபிறப்பறுப்போர்**

அறியும் தன்மையை * முக்கண் நால்தோள்
ஐவாயரவோடு * ஆறுபொதி சடையோன்
அறிவரும் தன்மைப் பெருமையுள் நின்றனை *
ஏழுலகு எயிற்றினில் கொண்டனை * கூறிய
அறுசுவைப்பயனுமாயினை * சுடர்விடும்
ஐம்படை அங்கையுள் அமர்ந்தனை * சுந்தர
நால்தோள் முந்நீர் வண்ண ! * நின்னீரடி
ஒன்றிய மனத்தால் * ஒரு மதிமுகத்து
மங்கையர் இருவரும் மலரன * அங்கையின்
முப்பொழுதும் வருட அறிதுயிலமர்ந்தனை *
நெறிமுறை நால்வகை வருணமுமாயினை *
மேதகும் ஐம்பெரும் பூதமும் நீயே *
அறுபதமுரலும், கூந்தல்காரணம் *
ஏழ்விடையடங்கச்செற்றனை * அறுவகைச்
சமயமும், அறிவருநிலையினை * ஐம்பால்
ஓதியை ஆகத்திருத்தினை * அறம் முதல்
நான்கவையாய் மூர்த்தி மூன்றாய் *
இருவகைப் பயனாய் ஒன்றாய் விரிந்து
நின்றனை * குன்றா மதுமலர்ச்சோலை
வண்கொடிப் படப்பை * வருபுனல் பொன்னி
மாமணியலைக்கும் * செந்நெல் ஒண்கழனித்
திகழ்வனமுடுத்த * கற்போர்புரிசைக்
கனகமாளிகை * நிமிர்கொடி விசும்பில்
இளம்பிறை துவக்கும் * § செல்வம் மல்கு தென்
திருக்குடந்தை * அந்தணர் மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியில், அறிதுயில்

அமர்ந்த பரம ! * நின்னடியிணை பணிவன்
வருமிடரகல மாற்றோவினையே. 1

§§ இடங்கொண்ட நெஞ்சத்திணங்கிக்
கிடப்பன * என்றும் பொன்னித்
தடங்கொண்ட தாமரைசூழும்
மலர்ந்த தண்பூங்குடந்தை *
விடங்கொண்டவெண்பல்,
கருந்துத்தி செங்கண்தழலுமிழ்வாய் *
படங்கொண்ட பாம்பணைப்பள்ளி
கொண்டான் திருப்பாதங்களே.

திருவெழுகூற்றிருக்கை முற்றிற்று
திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

****

1
121
12321
1234321
123454321
12345654321
1234567654321

§§ இப்பாசுரம் கம்பநாட்டாழ்வார் செய்தது என்பர்

## *திருமங்கையாழ்வார் அருளிச்செய்த*
# *சிறியதிருமடல்*

*தனியன்*

*(பிள்ளை திருநறையூர் அரையர் அருளிச்செய்தது*

முள்ளிச் செழுமலரோதாரான் முளைமதியம் *
கொள்ளிக்கு என்னுள்ளம் கொதியாமே* வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க்கலியைவெட்டி*
மருவாளன் தந்தான் மடல்.

§ காரார்வரைக்கொங்கை கண்ணார்கடலுடுக்கை *
சீரார்சுடர்ச்சுட்டி செங்கலுழிப்பேராற்று *
பேராரமார்பின் பெருமாமழைக்கூந்தல் *
நீராரவேலி நிலமங்கையென்னும் *
இப்பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே 1

அம்மூன்றும்ஆராயில்தானே அறம்பொருளின்பமென்று *
ஆரார் இவற்றினிடையதனை எய்துவார் *
சீரார் இருகலையும் எய்துவர் 2

சிக்கெனமற்று ஆரானுமுண்டென்பார் என்பதுதானதுவும் *
ஓராமையன்றே? உலகத்தார் சொல்லும்சொல் *
ஓராமையாமாறு அதுவுரைக்கேன் கேளாமே *
காரார்புரவியேழ் பூண்டதனியாழி *
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு *
ஆராவமுதம் அங்கெய்தி 3

அதினின்றும் வாராதொழிவதொன்றுண்டே?*
அது நிற்க ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே?*
ஏராரிளமுலையீர்! என்தனக்குஉற்றதுதான் *
காரார் குழலெடுத்துக்கட்டி 4
கதிர்முலையை வாராரவீக்கி மணிமேகலைதிருத்தி *
ஆரார் அயில்வேற்கண் அஞ்சனத்தின் நீறணிந்து *
சீரார்செழும்பந்து கொண்டடியா நின்றேன்நான் *
நீரார்கமலம்போல் செங்கண்மாலென்றொருவன் *
பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்க *
சீரார்குடமிரண்டேந்தி 5

செழுந்தெருவே ஆராரெனச்சொல்லி ஆடுமதுகண்டு *

ஏராரிளமுலையார் என்னையரும் எல்லாரும் *
வாராயோவென்றார்க்குச் சென்றேன்என்வல்வினையால் *
காரார்மணிநிறமும் கைவளையும்காணேன்நான் *
ஆரானும் சொல்லிற்றும் கொள்ளேன் 6

அறிவழிந்துதீராவுடம்பொடு பேதுறுவேன்கண்டிரங்கி *
ஏரார்கிளிக்கிளவி எம்மனைதான்வந்துஎன்னை *
சீரார் செழும்புழுதிக்காப்பிட்டு 7

செங்குறிஞ்சித்தாரார் நறுமாலைச்சாத்தற்கு *
தான்பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள். 8

அதனாலும்தீராதுஎன்சிந்தைநோய் தீராதுஎன்பேதுறவு *
வாராதுமாமை அதுகண்டுமற்றாங்கே *
ஆரானும்மூதறியும் அம்மனைமார்சொல்லுவார் *
பாரோர்சொலப்படும் கட்டுப்படுத்திரேல் *
ஆரானும் மெய்ப்படுவனென்றார். 9

அதுகேட்டுக் காரார்குழற்கொண்டைக் கட்டுவிச்சிகட்டேறி *
சீரார்சுளகில் சிலநெல்பிடித்தெறியா *
வேராவிதிர்விதிரா மெய்சிலிராக்கைமோவா *
பேராயிரமுடையான் என்றாள் 10

பேர்த்தேயும்காரார் திருமேனிகாட்டினாள் *
கையதுவும் சீரார் வலம்புரியேஎன்றாள். 11

திருத்துழாய்த்தாரார்நறுமாலை கட்டுரைத்தாள்கட்டுரையா *
நீரேதும்அஞ்சேன்மின் நும்மகளைநோய்செய்தான் *
ஆரானுமல்லன் அறிந்தேன்அவனைநான் *
கூரார்வேற்கண்ணீர்! உமக்குஅறியக்கூறுகேனோ? *
ஆரால்இவ்வையம் அடியளப்புண்டதுதான்? *
ஆரால்இலங்கை பொடிபொடியாவீழ்ந்தது? *
மற்றுஆராலே கன்மாரிகாத்ததுதான்? 12
ஆழிநீர்ஆரால் கடைந்திடப்பட்டது? * அவன்காண்மின்
ஊராநிரைமேய்த்து உலகெல்லாம்உண்டுமிழ்ந்தும் *
ஆராததன்மையனாய் ஆங்கொருநாள்ஆய்ப்பாடி *
சீரார்கலையல்குல் சீரடிசெந்துவர்வாய் *
வாரார்வனமுலையாள் மத்தாரப்பற்றிக்கொண்டு *
ஏராரிடைநோவ எத்தனையோர்போதுமாய் *

சீரார்தயிர்கடைந்து வெண்ணெய்திரண்டதனை *
வேரார்நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு *
நாரார்உறியேற்றி நன்கமையவைத்ததனை *
போரார்வேற்கண்மடவாள் போந்தனையும்பொய்யுறக்கம் *
ஓராதவன்போல் உறங்கியறிவுற்று *
தாரார்தடந்தோள்கள் உள்ளளவும்கைநீட்டி *
ஆராதவெண்ணெய்விழுங்கி 13.

அருகிருந்த மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே *
ஓராதவன்போல் கிடந்தானைக்கண்டவளும் *
வாராத்தான் வைத்ததுகாணாள் 14

வயிறடித்துஇங்கு ஆரார்புகுதுவார்? ஐயரிவரல்லால் *
நீராம்இதுசெய்தீர் என்றுஓர்நெடுங்கயிற்றால் *
ஊரார்களெல்லாரும் காணஉரலோடே *
தீராவெகுளியளாய்ச் சிக்கெனவார்த்தடிப்ப *
ஆராவயிற்றினோடு ஆற்றாதான் 15

அன்றியும் நீரார்நெடுங்கயத்தைச் சென்றலைக்கநின்றுரப்பி *
ஓராயிரம் பணவெங்கோவியல் நாகத்தை *
வாராயெனக்கென்று மற்றதன்மத்தகத்து *
சீரார் திருவடியால் பாய்ந்தான் 16

தன்சீதைக்குநேராவனென்று ஓர்நிசாசரிதான்வந்தாளை *
கூரார்ந்தவாளால் கொடிமூக்கும்காதிரண்டும் *
ஈராவிடுத்து அவட்குமூத்தோனை. 17

வெந்நரகம்சேராவகையே சிலைகுனித்தான் *
செந்துவர்வாய் வாரார்வனமுலையாள் வைதேவிகாரணமா *
ஏரார்தடந்தோளிராவணனை. 18
ஈரைந்துசீரார்சிரமறுத்துச் செற்றுகந்தசெங்கண்மால் *
போரார்நெடுவேலோன் பொன்பெயரோனாகத்தை *
கூரார்ந்தவள்ளுகிரால்கீண்டு 19.

குடல்மாலை சீரார் திருமார்பின்மேல்கட்டி * செங்குருதி
சோராக்கிடந்தானைக் குங்குமத்தோள்கொட்டி *
ஆராவெழுந்தான் அரியுருவாய். 20

அன்றியும்பேர் வாமனனாகியகாலத்து * மூவடிமண்
தாராயெனக்கென்று வேண்டிச்சலத்தினால் *
நீரேற்று உலகெல்லாம் நின்றளந்தான் மாவலியை. 21

ஆராதபோரில் அசுரர்களும் தானுமாய் *
காரார்வரைநட்டு நாகம்கயிறாக *
பேராமல் தாங்கிக்கடைந்தான். 22

திருத்துழாய் தாரார்ந்தமார்வன் தடமால்வரைபோலும் *
போரானைபொய்கைவாய்க் கோட்பட்டுநின்றலறி *
நீரார்மலர்க்கமலம்கொண்டு ஓர்நெடுங்கையால் *
நாராயணாவோ ! மணிவண்ணா ! நாகணையாய் ! *
வாராய் என்னாரிடரைநீக்காய். 23.

எனவெகுண்டு தீராதசீற்றத்தால் சென்றுஇரண்டுகூறாக *
ஈராஅதனை யிடர்கடிந்தான் எம்பெருமான் *
பேராயிரமுடையான் பேய்ப்பெண்டீர்! நும்மகளை *
தீராநோய்செய்தான் எனஉரைத்தாள். 24

சிக்கெனமற்று ஆரானுமல்லாமை கேட்டு எங்களம்மனையும் *
போரார்வேற்கண்ணீர் ! அவனாகில்பூந்துழாய் *
தாராதொழியுமே? தன்னடிச்சியல்லளே? *
மற்றுஆரானுமல்லனே யென்றொழிந்தாள். 25
நான்அவனைக் காரார்திருமேனி கண்டதுவேகாரணமா *
பேராப்பிதற்றாத் திரிதருவன் 26
பின்னையும்ஈராப்புகுதலும் இவ்வுடலைத்தண்வாடை *
சோராமறுக்கும் வகையறியேன். 27
சூழ்குழலார் ஆரானுமேசுவர் என்னுமதன்பழியை *
வாராமல்காப்பதற்கு வாளாஇருந்தொழிந்தேன் *
வாராய் மடநெஞ்சே! வந்து 28
மணிவண்ணன் சீரார்திருத்துழாய் மாலைநமக்கருளி *
தாரான்தருமென்று இரண்டத்தில்ஒன்றதனை *
ஆரானும்ஒன்னாதார் கேளாமேசொன்னக்கால் *
ஆராயுமேலும் பணிகேட்டுஅதன்றெனிலும் *
போராதொழியாதே போந்திடு நீயென்றேற்கு *
காரார்கடல்வண்ணன் பின்போனநெஞ்சமும் *
வாராதே என்னை மறந்ததுதான் 29

வல்வினையேன் ஊரார்உகப்பதேயாயினேன் 30
மற்றெனக்கிங்கு ஆராய்வாரில்லை அழல்வாய்மெழுகுபோல் *
நீராய் உருகும் என்னாவி 31
நெடுங்கண்கள் ஊராருறங்கிலும் தானுறங்கா *
உத்தமன்தன் பேராயினவே பிதற்றுவன். 32
பின்னையும்காரார் கடல்போலும் காமத்தராயினார் *
ஆரேபொல்லாமையறிவார்? அதுநிற்க * 33
ஆரானுமாதானும் அல்லள்அவள்காணீர் *
வாரார்வனமுலை வாசவதத்தையென்று *
ஆரானும்சொல்லப்படுவாள். 34
அவளும்தன்பேராயமெல்லாம் ஒழியப்பெருந்தெருவே *
தாரார்தடந்தோள் தளைக்காலன்பின்போனாள் *
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே? 35
மற்றெனக்கிங்குஆரானும் கற்பிப்பார்நாயகரே ? *
நான்அவனைக்காரார்திருமேனி காணுமளவும்போய் *
§ சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே *
மதிட்கச்சியூரகமே பேரகமே *
பேராமருதிறுத்தான் வெள்ளறையேவெஃகாவே *
பேராலிதண்கால் நறையூர்திருப்புலியூர் *
§ ஆராமம் சூழ்ந்த அரங்கம். 36
கணமங்கைகாரார்மணிநிறக் கண்ணனூர்விண்ணகரம் *
சீரார்கணபுரம் சேறைதிருவழுந்தூர் *
காரார்குடந்தை கடிகைகடல்மல்லை *
ஏரார்பொழில்சூழ் இடவெந்தைநீர்மலை *
சீராரும் மாலிருஞ்சோலை திருமோகூர். 37
பாரோர்புகழும் வதரிவடமதுரை *
ஊராயவெல்லாம் ஒழியாமேநான்அவனை *
ஓரானைகொம்பொசித்து ஓரானைகோள்விடுத்தசீரானை *
செங்கணெடியானைத் தேன்துழாய்த்தாரானை *
தாமரைபோல்கண்ணானை. 38
எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும்பிதற்றி. 39
§ பெருந்தெருவே ஊரார்இகழிலும் ஊராதொழியேன்நான் *
வாரார்பூம்பெண்ணைமடல். 40

( ஊராதொழியேன் உலகறியஒண்ணுதலீர் ! *
சீரார்முலைத்தடங்கள் சேரளவும் * பாரெல்லாம்
அன்றோங்கி நின்றளந்தான் நின்றதிருநறையூர் *
மன்றோங்க ஊர்வன் மடல்.)

## *திருமங்கையாழ்வார் அருளிச்செய்த*

# பெரியதிருமடல்

***தனியன்***

***(பிள்ளை திருநறையூர் அரையர் அருளிச்செய்தது)***

பொன்னுலகில்வானவரும் பூமகளும்போற்றிசெய்யும் *
நல்நுதலீர்! நம்பிநறையூரர் * மன்னுலகில்
என்னிலைமைகண்டும் இரங்காரேயாமாகில் *
மன்னு மடலூர்வன்வந்து.

§ மன்னியபல்பொறிசேர் ஆயிரவாய்வாளரவின் *
சென்னிமணிக்குடுமித் தெய்வச்சுடர்நடுவுள் *
மன்னியநாகத்தணைமேல் ஓர்மாமலைபோல் *
மின்னுமணிமகர குண்டலங்கள்வில்வீச *
துன்னியதாரகையின் பேரொளிசேர்ஆகாசம் *
என்னும்விதானத்தின்கீழால். 1

இருசுடரைமன்னும் விளக்காகஏற்றி *
மறிகடலும்பன்னு திரைக்கவரிவீச 2

நிலமங்கைதன்னைமுனநாள் அளவிட்டதாமரைபோல்.*
மன்னியசேவடியை வானியங்குதாரகைமீன் *
என்னும் மலர்ப்பிணையல்ஏய்ந்த. 3

மழைக்கூந்தல் தென்னன்உயர்பொருப்பும் தெய்வவடமலையும் *
என்னும்இவையே முலையாவடிவமைந்த *
அன்னநடையஅணங்கே. 4

அடியிணையைத்தன்னுடையஅங்கைகளால் தான்தடவத்தான்கிடந்து *
ஓர்உன்னியயோகத்து உறக்கம் தலைக்கொண்டபின்னை *
தன்நாபிவலயத்துப் பேரொளிசேர் *
மன்னியதாமரை மாமலர்பூத்து *
அம்மலர்மேல்முன்னம் திசைமுகனைத்தான்படைக்க * 5
மற்றவனும்முன்னம் படைத்தனன்நான்மறைகள் *
அம்மறைதான்மன்னும்அறம்பொருளின்பம் வீடென்றுஉலகில் *
நன்னெறி மேம்பட்டன நான்கன்றே. 6

நான்கினிலும் பின்னையதுபின்னைப் பெயர்தருமென்பது *
ஓர்தொன்னெறியை வேண்டுவார் வீழ்கனியும்ஊழிலையும் *
என்னும்இவையே நுகர்ந்துஉடலம் தாம்வருந்தி *
துன்னும் இலைக்குரம்பைத் துஞ்சியும் * 7

வெஞ்சுடரோன்மன்னும்அழல்நுகர்ந்தும் வண்தடத்தினுட்கிடந்தும் *
இன்னதோர்தன்மையராய் ஈங்குஉடலம்விட்டெழுந்து *
தொன்னெறிக்கண்சென்றார் எனப்படும்சொல்லல்லால் *
இன்னதோர்காலத்து இனையார்இதுபெற்றார் *
என்னவும்கேட்டறிவதில்லை * 8

உளதென்னில்மன்னும்கடுங்கதிரோன் மண்டலத்தின்நன்னடுவுள் *
அன்னதோரில்லியினூடு போய். 9

வீடென்னும்தொன்னெறிக்கண்சென்றாரைச்
சொல்லுமின்கள்சொல்லாதே *
அன்னதேபேசும் அறிவில்சிறுமனத்து *
ஆங்குஅன்னவரைக் கற்பிப்போம்யாமே * 10

அதுநிற்கமுன்னம்நான்சொன்ன அறத்தின்வழிமுயன்ற *
அன்னவர்தாம்கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன் *
பொன்னகரம்புக்கு அமரர்போற்றிசெப்ப * 11

பொங்கொளிசேர்கொல்நவிலும்கோளரிமாத் தான்சுமந்தகோலம்சேர் *
மன்னியசிங்காசனத்தின்மேல் 12

வாள்நெடுங்கண்கன்னியரால்இட்ட கவரிப்பொதியவிழ்ந்து *
ஆங்குஇன்னிளம் பூந்தென்றலியங்க * 13

மருங்கிருந்தமின்னையநுண்மருங்குல் மெல்லியலார்வெண்முறுவல் *
முன்னம்முகிழ்த்த முகிழ்நிலாவந்தரும்ப *
அன்னவர்தம்மானோக்க முண்டாங்கணிமலர்சேர் *
பொன்னியல்கற்பகத்தின் காடுடுத்தமாடெல்லாம் *
மன்னியமந்தாரம் பூத்தமதுத்திவலை *
இன்னிசைவண்டமரும் சோலைவாய்மாலைசேர் *
மன்னியமாமயில்போல்கூந்தல் 14

மழைத்தடங்கண்மின்னிடையாரோடும் விளையாடிவேண்டிடத்து *
மன்னுமணித்தலத்து மாணிக்கமஞ்சரியின் *
மின்னின்ஒளிசேர் பளிங்குவிளிம்படுத்த *
மன்னும்பவளக்கால் செம்பொன்செய்மண்டபத்துள் *
அன்னநடைய அரம்பையர்தம்கைவளர்த்த *
இன்னிசையாழ்பாடல் கேட்டுஇன்புற்று 15

இருவிசும்பில்மன்னுமழைதவழும் வாணிலாநீள்மதிதோய் *
மின்னின்ஒளிசேர் விசும்பூரும்மாளிகைமேல் *
மன்னுமணிவிளக்கைமாட்டி * 16

மழைக்கண்ணார்பன்னுவிசித்திரமாப் பாப்படுத்தபள்ளிமேல் *
துன்னியசாலேகம் சூழ்கதவம்தாள்திறப்ப *
அன்னம்உழக்க நெரிந்துக்கவாள்நீலச் *
சின்ன நறுந்தாது சூடி. 17

ஓர்மந்தாரம்துன்னு நறுமலரால்தோள்கொட்டி *
கற்பகத்தின்மன்னுமலர்வாய் மணிவண்டுபின்தொடர *
இன்னிளம்பூந்தென்றல்புகுந்து ஈங்கிளமுலைமேல் *
நன்னருஞ்சந்தனச்சேறு புலர்த்த 18

தாங்கருஞ்சீர் மின்னிடைமேல் -
கைவைத்திருந்து ஏந்திளமுலைமேல் *
பொன்னரும்பாரம்புலம்ப 19

அகங்குழைந்தாங்குஇன்னவுருவின் இமையாத்தடங்கண்ணார் *
அன்னவர்தம் மானோக்கமுண்டு ஆங்குஅணிமுறுவல் *
இன்னமுதம் மாந்தியிருப்பர் 20

இதுவன்றே அன்னஅறத்தின் பயனாவது *
ஒண்பொருளும் அன்னதிறத்ததேயாதலால் 21

காமத்தின்மன்னும் வழிமுறையே நிற்றும்நாம் *
மானோக்கின் அன்னநடையார் அலரேசஆடவர்மேல் *
மன்னுமடலூரார் என்பதோர்வாசகமும் *
தென்னுறையில் கேட்டறிவதுண்டு * 22

அதனையாம்தெளியோம் மன்னும்வடநெறியேவேண்டினோம் *
வேண்டாதார் தென்னன்பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் *
அன்னதோர் தன்மை அறியாதார் 23

ஆயன்வேய் இன்னிசையோசைக்கு இரங்காதார் *
மால்விடையின்மன்னு மணிபுலம்பவாடாதார் 24

பெண்ணைமேல்பின்னும்அவ்வன்றிற் பேடைவாய்ச்சிறுகுரலுக்கு *
உன்னியுடலுருகி நையாதார் 25

உம்பர்வாய்த்துன்னுமதியுகத்த தூநிலாநீள்நெருப்பில் *
தம்முடலம் வேவத் தளராதார் 26

காமவேள்மன்னும்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்ய *
பொன்னெடுவீதி புகாதார் 27

தம்பூவணைமேல் சின்னமலர்க்குழலும் அல்குலும்மென்முலையும் *
இன்னிளவாடைதடவத்தாம்கண்துயிலும் *
பொன்னனையார் பின்னும் திருவுறுக 28

போர்வேந்தன் தன்னுடையதாதை பணியால்அரசொழிந்து *
பொன்னகரம்பின்னே புலம்பவலங்கொண்டு *
மன்னும்வளநாடு கைவிட்டு. 29

மாதிரங்கள்மின்னுருவில்விண்தேர் திரிந்துவெளிப்பட்டு *
கல்நிரைந்துதீந்து கழையுடைந்துகால்சுழன்று *
பின்னும்திரைவயிற்றுப் பேயேதிரிந்துலவா *
கொன்னவிலும் வெங்கானத்தூடு 30

கொடுங்கதிரோன் துன்னுவெயில்வறுத்த வெம்பரல்மேல்பஞ்சடியால் *
மன்னன்இராமன்பின் வைதேவியென்றுரைக்கும் *
அன்னநடைய அணங்குநடந்திலளே? 31

பின்னும்கருநெடுங்கண் செவ்வாய்பிணைநோக்கின் *
மின்னனையநுண்மருங்குல் வேகவதியென்றுரைக்கும் கன்னி *
தன்இன்னுயிராம் காதலனைக்காணாது *
தன்னுடையமுன்தோன்றல் கொண்டேகத்தான்சென்று *
அங்குஅன்னவனை நோக்காதுஅழித்துரப்பி 32

வாளமருள் கல்நவில்தோள்காளையைக் கைப்பிடித்துமீண்டும்போய்*
பொன்னவிலும்ஆகம்புணர்ந்திலளே? * 33

பூங்கங்கைமுன்னம் புனல்பரக்கும்நல்நாடன் *
மின்னாடும்கொன்னவிலும்நீள்வேல் குருக்கள்குலமதலை *
தன்னிகரொன்றில்லாத வென்றித்தனஞ்சயனை *
பன்னாகராயன் மடப்பாவை * 34

பாவைதன்மன்னியநாணச்சம் மடமென்றிவையகல *
தன்னுடைய கொங்கைமுகம்நெரிய 35

தான்அவன்தன் பொன்வரையாகம் தழீஇக்கொண்டுபோய் *
தனதுநல்நகரம்புக்கு நயந்துஇனிதுவாழ்ந்ததுவும் *
முன்னுரையில் கேட்டறிவதில்லையே? 36

சூழ்கடலுள்பொன்னகரம்செற்ற புரந்தரனோடேரொக்கும் *
மன்னவன்வாணன் அவுணர்க்குவாள்வேந்தன் *
தன்னுடையபாவை உலகத்துத்தன்னொக்கும் *
கன்னியரையில்லாத காட்சியாள் 37
தன்னுடைய இன்னுயிர்த்தோழியால் எம்பெருமான்ஈந்துழாய் *
மன்னு மணிவரைத்தோள் மாயவன் 38

பாவியேன் என்னைஇதுவிளைத்த ஈரிரண்டுமால்வரைத்தோள் *
மன்னவன்தன்காதலனை மாயத்தால்கொண்டுபோய் *
கன்னிதன்பால்வைக்க மற்றவனோடுஎத்தனையோ *
மன்னிய பேரின்பமெய்தினாள் 39

மற்றிவைதான்என்னாலேகேட்டீரே ?
ஏழைகாள் ! என்னுரைக்கேன் ? *
மன்னு மலையரையன் பொற்பாவை 40

வாள்நிலா மின்னுமணிமுறுவல் செவ்வாயுமையென்னும் *
அன்னநடைய அணங்கு நுடங்கிடைசேர் *
பொன்னுடம்புவாடப் புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச் சடாபாரம்தான்தரித்து *
ஆங்கு அன்ன அருந்தவத்தினூடுபோய் 41

ஆயிரந்தோள் மன்னுகரதலங்கள் மட்டித்து *
மாதிரங்கள்மின்னியெரிவீச மேலெடுத்த சூழ்கழற்கால் *
பொன்னுலகமேழும்கடந்து உம்பர்மேல்சிலும்ப *
மன்னு குலவரையும் மாருதமும்தாரகையும் *
தன்னினுடனே சுழலச்சுழன்றாடும் *
கொல்நவிலும் மூவிலைவேல் கூத்தன்பொடியாடி *
அன்னவன்தன்பொன்னகலம் சென்றாங்கணைந்திலளே ? *
பன்னி உரைக்குங்கால் பாரதமாம் 42

பாவியேற்கு என்னுறுநோய் யான்உரைப்பக்கேண்மின் *
இரும்பொழில்சூழ் மன்னுமறையோர் திருநறையூர்மாமலைபோல் *
பொன்னியலும்மாடக் கவாடம்கடந்துபுக்கு *
என்னுடைய கண்களிப்ப நோக்கினேன் 43

நோக்குதலும்மன்னன்திருமார்பும் வாயும்அடியிணையும் *
பன்னுகரதலமும்கண்களும் 44

பங்கயத்தின் பொன்னியல்காடு ஓர்மணிவரைமேல் பூத்ததுபோல் *
மின்னியொளிபடைப்ப வீழ்நாணும்தோள்வளையும் *
மன்னியகுண்டலமும் ஆரமும்நீள்முடியும் *
துன்னுவெயில்விரித்த சூளாமணியிமைப்ப *
மன்னுமரதகக் குன்றின் மருங்கே 45

ஓர்இன்னிளவஞ்சிக்கொடியொன்று நின்றதுதான் *
அன்னமாய்மானாய் அணிமயிலாய்ஆங்கிடையே *
மின்னாய்இளவேயிரண்டாய் இணைச்செப்பாய் *
முன்னாயதொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டாய்*
அன்னதிருவுருவம் நின்றதுஅறியாதே *
என்னுடையநெஞ்சும் அறிவும்இனவளையும் *
பொன்னியலும்மேகலையும் ஆங்கொழியப்போந்தேற்கு *
மன்னும்மறிகடலும்ஆர்க்கும் 46

மதியுகுத்தஇன்னிலாவின்கதிரும் என்தனக்கேவெய்தாகும் *
தன்னுடையதன்மை தவிரத்தானென்கொலோ ? *

தென்னன்பொதியில் செழுஞ்சந்தின்தாதளைந்து *
மன்னிவ்வுலகை மனம்களிப்ப வந்தியங்கும் *
இன்னிளம்பூந்தென்றலும் வீசும்எரிஎனக்கே *
முன்னியபெண்ணைமேல் முள்முளரிக்கூட்டகத்து *
பின்னும்அவ்வன்றில் பேடைவாய்ச்சிறுகுரலும் *
என்னுடையநெஞ்சுக்கு ஓரீர்வாளாம்என்செய்கேன் ? *
கல்நவில்தோள்காமன் கருப்புச்சிலைவளைய *
கொல்நவிலும்பூங்கணைகள் கோத்துப்பொதவணைந்து *
தன்னுடையதோள்கழியவாங்கி 47

தமியேன்மேல்என்னுடையநெஞ்சே இலக்காகஎய்கின்றான் *
பின்னிதனைக் காப்பீர்தாம் இல்லையே 48

பேதையேன்கல்நவிலும்காட்டகத்து ஓர்வல்லிக்கடிமலரின் *
நல்நறுவாசம் மற்றாரானும் எய்தாமே *
மன்னும்வறுநிலத்து வாளாங்கு குத்ததுபோல் *
என்னுடையபெண்மையும் என்நலனும்என்முலையும் *
மன்னுமலர்மங்கைமைந்தன் 49

கணபுரத்துப்பொன்மலைபோல்நின்றவன்தன்
பொன்னகலம்தோயாவேல் *
என்னிவைதான்?வாளாஎனக்கேபொறையாகி *
முன்னிருந்துமூக்கின்று மூவாமைக்காப்பதோர் *
மன்னும் மருந்தறிவீரில்லையே 50

மால்விடையின் துன்னு பிடரெருத்துத்தூக்குண்டு *
வன்தொடரால்கன்னியர் கண்மிளிரக்கட்டுண்டு 51

மாலைவாய்த்தன்னுடைய நாவொழியாது ஆடும்தனிமணியின் *
இன்னிசையோசையும் வந்துஎன்செவிதனக்கே *
கொல்நவிலும்எஃகின் கொடிதாய்நெடிதாகும் *
என்னிதனைக்காக்குமா? சொல்லீர் 52

இதுவிளைத்தமன்னன் நறுந்துழாய்வாழ்மார்பன் *
மாமதிகோள்முன்னம்விடுத்த முகில்வண்ணன் 53

காயாவின்சின்ன நறும்பூந்திகழ்வண்ணன் *
வண்ணம்போல் அன்னகடலை மலையிட்டணைகட்டி *
மன்னன்இராவணனை மாமண்டுவெஞ்சமத்து *
பொன்முடிகள்பத்தும் புரளச்சரம்துரந்து *
தென்னுலகம் ஏற்றுவித்த சேவகனை 54

ஆயிரக்கண் மன்னவன் வானமும் வானவர்தம்பொன்னுலகும் *
தன்னுடையதோள்வலியால் கைக்கொண்டதானவனை *
பின்னோர் அரியுருவமாகி எரிவிழித்து *
கொல்நவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே 55

வல்லாளன்மன்னு மணிக்குஞ்சி பற்றிவரவீர்த்து *
தன்னுடைய தாள்மேல்கிடாத்தி 56

அவனுடையபொன்னகலம்வள்ளுகிரால் போழ்ந்துபுகழ்படைத்த *
மின்னிலங்கும்ஆழிப் படைத்தடக்கைவீரனை *
மன்னிவ்வகலிடத்தை மாமுதுநீர் தான்விழுங்க *
பின்னும்ஓரேனமாய்ப் புக்குவளைமருப்பில் *
கொல்நவிலும் கூர்நுதிமேல் வைத்தெடுத்தகூத்தனை *
மன்னும்வடமலையை மத்தாகமாசுணத்தால் *
மின்னும்இருசுடரும் விண்ணும்பிறங்கொளியும் *
தன்னினுடனே சுழல மலைதிரித்து *
ஆங்குஇன்னமுதம் வானவரையூட்டி *
அவருடையமன்னும் துயர்கடிந்தவள்ளலை 57

மற்றன்றியும்தன்னுருவம்ஆரும் அறியாமல்தானங்கோர் *
மன்னும் குறளுருவின் மாணியாய் 58

மாவலிதன்பொன்னியலும் வேள்விக்கண்புக்கிருந்து *
போர்வேந்தர்மன்னைமனங்கொள்ள வஞ்சித்துநெஞ்சுருக்கி *
என்னுடையபாதத்தால் யானளப்பமூவடிமண் *
மன்னா ! தருகென்று வாய்திறப்ப 59

மற்றவனும் என்னால்தரப்பட்டது என்றலுமே *
அத்துணைக்கண் மின்னார் மணிமுடிபோய் விண்தடவ 60

மேலெடுத்தபொன்னார்கனைகழற்கால் ஏழுலகும்போய்க்
கடந்து *அங்குஒன்னாஅசுரர் துளங்கச்செலநீட்டி *
மன்னிவ்வகலிடத்தை மாவலியைவஞ்சித்து *
தன்னுலகமாக்குவித்த தாளானை. 61

தாமரைமேல் மின்னிடையாள் நாயகனை
விண்ணகருள்பொன்மலையை *
பொன்னிமணிகொழிக்கும் பூங்குடந்தைப்போர்விடையை *
தென்னன்குறுங்குடியுள் செம்பவளக்குன்றினை *
மன்னியதண்சேறைவள்ளலை 62
மாமலர்மேல்அன்னம்துயிலும் அணிநீர்வயலாலி *
என்னுடைய இன்னமுதை எவ்வுள்பெருமலையை *
கன்னிமதிள்சூழ் கணமங்கைக்கற்பகத்தை *
மின்னைஇருசுடரை வெள்ளறையுள் கல்லறைமேல்
பொன்னை *மரதகத்தைப் புட்குழியெம்போரேற்றை *
§ மன்னுமரங்கத்து எம்மாமணியை 63

வல்லவாழ்ப்பின்னைமணாளனைப் பேரில்பிறப்பிலியை *
தொன்னீர்க்கடல்கிடந்த தோளாமணிச்சுடரை *
என்மனத்துமாலை இடவெந்தை ஈசனை *
மன்னும் கடல்மலை மாயவனை 64

வானவர்தம்சென்னிமணிச்சுடரைத் தண்கால்திறல்வலியை *
தன்னைப்பிறரறியாத் தத்துவத்தைமுத்தினை *
அன்னத்தைமீனை அரியைஅருமறையை *
முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை 65

கோவலூர்மன்னும் இடைகழியெம்மாயவனை *
பேயலறப்பின்னும் முலையுண்டபிள்ளையை 66

அள்ளல்வாய்அன்னம்இரைதேர் அழுந்தூர் எழுஞ்சுடரை *
தென்தில்லைச்சித்திரகூடத்து என்செல்வனை 67

மின்னிமழைதவழும் வேங்கடத்துஎம்வித்தகனை *
மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை *
கொல்நவிலும் ஆழிப்படையானை 68

கோட்டியூர் அன்னவுருவின் அரியை *
திருமெய்யத்து இன்னமுதவெள்ளத்தை இந்தளூரந்தணனை *
மன்னும்மதிள்கச்சி வேளுக்கையாளரியை *
மன்னிய பாடகத்து எம்மைந்தனை 69

வெஃகாவில்உன்னிய யோகத்துறக்கத்தை *
ஊரகத்துள்அன்னவனை அட்டபுயகரத்தெம்மான் ஏற்றை *
என்னை மனம்கவர்ந்த ஈசனை 70
வானவர்தம்முன்னவனை மூழிக்களத்துவிளக்கினை *
அன்னவனைஆதனூர் ஆண்டளக்கும்ஐயனை *
நென்னலை இன்றினை நாளையை 71

நீர்மலைமேல்மன்னு மறைநான்குமானானை *
புல்லாணித்தென்னன் தமிழைவடமொழியை *
நாங்கூரில்மன்னுமணிமாடக் கோயில்மணாளனை *
நல்நீர்த்தலைச்சங்க நாண்மதியை 72

நான்வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை *
தென்னறையூர் மன்னுமணிமாடக் கோயில்மணாளனை *
கல்நவில்தோள்காளையைக் கண்டாங்குக்கைதொழுது *
என்னிலைமையெல்லாம் அறிவித்தால் எம்பெருமான் *
தன்அருளும் ஆகமும் தாரானேல் 73

தன்னைநான் மின்னிடையார்சேரியிலும் வேதியர்கள்வாழ்விடத்தும் *
தன்னடியார்முன்பும் தரணிமுழுதாளும் *
கொல்நவிலும்வேல்வேந்தர் கூட்டத்தும்நாட்டகத்தும் *
தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன் 74

தான்முனநாள் மின்னிடையாய்ச்சியர்தம் சேரிக்களவின்கண் *
துன்னுபடல் திறந்து புக்கு 75

தயிர்வெண்ணெய் தன்வயிறாரவிழுங்க *
கொழுங்கயற்கண் மன்னுமடவோர்கள் பற்றிஓர்வான்கயிற்றால் *
பின்னும்உரலோடு கட்டுண்டபெற்றிமையும் *
அன்னதோர்பூதமாய் ஆயர்விழவின்கண் *
துன்னுசகடத்தால் புக்கபெருஞ்சோற்றை *
முன்னிருந்துமுற்றத்தான் துற்றியதெற்றனவும் *
மன்னர்பெரும்சவையுள் வாழ்வேந்தர்தூதனாய் *
தன்னையிகழ்ந்துரைப்பத் தான்முனநாள்சென்றதுவும் *

மன்னுபறைகறங்க மங்கையர்தம்கண்களிப்ப *
கொன்னவிலும்கூத்தனாய்ப் பெயர்த்தும்குடமாடி*
என்னிவன்? என்னப்படுகின்ற ஈடறவும் *
தென்னிலங்கையாட்டி அரக்கர்குலப்பாவை *
மன்னன் இராவணன் தன் நல்தங்கை 76

வாளெயிற்றுத்துன்னுசுடுசினத்துச் சூர்ப்பணகாசோர்வெய்தி *
பொன்னிறங்கொண்டு புலர்ந்தெழுந்தகாமத்தால் *
தன்னைநயந்தாளைத் தான்முனிந்துமூக்கரிந்து *
மன்னியதிண்ணெனவும் வாய்த்தமலைபோலும் *
தன்னிகரொன்றில்லாத தாடகையை 77

§ மாமுனிக்காத்தென்னுலகம் ஏற்றுவித்த திண்திறலும் *
மற்றிவைதான் உன்னியுலவா உலகறியஊர்வன்நான் *
முன்னிமுளைத்தெழுந்து ஓங்கியொளிபரந்த *
மன்னியபூம்பெண்ணைமடல். 78

என்னிலைமையெல்லாம் அறிவித்தால்எம்பெருமான் *
தன்னருளும் ஆகமும் தாரானேல் * பின்னைப்போய்
ஒண்துறைநீர்வேலை உலகறியஊர்வன்நான் *
வண்டறை பூம்பெண்ணைமடல்

பெரியதிருமடல் முற்றிற்று
திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்

***